
பசியின்மையால் சரியாக
சாப்பிடாத குழந்தையை...


...மனமார சாப்பிடச்
செய்வது
எப்படி ?







# cali-kut®

sarees, lawns, ladies handkerchiefs, scarfs
available at calicloth shops

சில்லறை விற்பனை ஷோரூம்கள் : 175/1, மவுண்ட் ரோடு, சென்னை-2 ○ 272, நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் ரோடு, சென்னை -1

CIBA




# பிரைகா டால்க்

இனிய நறுமண மூட்டி, வியர்வை நாற்றத்தை அறவே அகற்றும் டால்க். நாள் முழுவதும் உங்களைக் 'குளித்தெழுந்த' புத்துணர்வுடன் விளங்கச் செய்யும். அங்கமெல்லாம் பட்டுப் போன்ற மென்மையுற, விசேஷப் பொருள்களைக் கொண்ட டால்க்.

'சருமத்தை மிருதுவாக்கி,' வியர்வை நாற்றத்தை அகற்றும் டால்க்.

# கல்கி

## பொருளடக்கம்

பிலவங்க, ஆனி 25 - ஜூலை, 9



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

நினைவுத் திரையில்....

மனைவி: என்ன இது, நீங்கள் இறந்துவிட்டதாகப் பேப்பரில் போட்டு இருக்கானே!

கணவன்: என்ன அக்கிரமம் பார்த்தாயா? இன்னும் ஒரு பயலேனும் அனுதாபக் கடிதமே எழுதலை! எத்தனை பேர் நமக்குப் பிராண சிநேகிதம் என்று வேஷம் போட்டார்கள்? அவ்வளவும் பொய்! தலை மறைந்தால் அவ்வளவுதான்!

- சாமி

கல்கி, நவம்பர் 7, 1948.

இலங்கையில் 40 சதம் (தபால்-செலவு தனி)

இப்படி நடவாதிருக்கட்டும்!





தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 26 □ இதழ் 49

# "எழுச்சி" எதற்கு?

சேலத்தில் உருக்காலை அமைக்காவிடில் கிளர்ச்சி செய்ய வேண்டும் என்று தமிழக அரசு விரும்புவதாகத் தெரிந்தவுடன் பலர் திடுக்கிட்டனர். தமிழ்நாட்டில் உருக்காலை ஏற்படவேண்டும் என்று தீவிரமாக விரும்புகிறவர்களும் கூடக் 'கிளர்ச்சி' என்ற சொல்லைக் கேட்டதால் திடுக்கிட்டனர். கடைகளை அடைப்பதில் தொடங்கிப் போக்குவரத்தைத் தடுப்பது, ரயில் ஸ்டேஷன்களைக் கொளுத்துவது முதலிய பல விபரீதங்களை அல்லவா 'கிளர்ச்சி' உண்டாக்கி விடும்? மக்களைக் கிளர்ச்சியில் தூண்டிவிடுகிற சர்க்காரால் பிற்பாடு சட்டத்தைக் காக்கவே இயலாமற்போய்விடுமே என்று நன்மக்கள் கவலையுற்றனர்.

இவர்களுடைய கவலைகளைப் போக்கும் விதத்தில் திரு அண்ணாதுரை அவர்கள் அரசாங்கத்தின் உத்தேசத்தை விளக்கியிருக்கிறார். 'மக்களை எவ்விதமான கிளர்ச்சியிலும் சர்க்கார் ஈடுபடுத்தப்போவதில்லை. கடையடைப்பு முதலியன இரா. இருந்தபோதிலும் மத்திய சர்க்காரால் தமிழகம் புறக்கணிக்கப்படுகிறது என்பதை எடுத்துக் காட்ட விரும்புகிறோம். மத்திய — மாநிலத் தொடர்புகளைப் பற்றியும், திட்டங்கள் பற்றியும் மக்களுக்கு அறிவுணர்த்தி எழுச்சி கொள்ளச் செய்வதே நோக்கம். முன்பே வாக்களிக்கப்பட்ட சேலம் உருக்காலையை அமைத்தேயாகவேண்டும் என்பதைத் தில்லிக்கு அழுத்தமாக எடுத்துக் காட்ட விரும்புகிறோம். இது தி. மு. க.வின் காரியமாக மட்டும் இருக்க வேண்டிய அவசியமில்லை. காங்கிரஸ் உட்பட எல்லாக் கட்சிகளும் இதில் சேரவேண்டும். 'கிளர்ச்சி'யாக இல்லாமல் மக்களின் 'எழுச்சி'யாகத் தமிழகத்தின் ஒருமித்த கருத்தை ஒரு குறிப்பிட்ட நாளில் மத்திய அரசுக்கு எடுத்துக் காட்ட வேண்டும்' என்று கூறியுள்ளார் முதன்மந்திரி.

'கிளர்ச்சி' இல்லை; 'எழுச்சி' தான் என்ற மட்டில் திருப்தி அடைகிறோம். மக்களுக்கு நாட்டு நடப்புக்களில் அறிவு புகட்டும் சீரிய உத்தேசத்தைப் பற்றியும் திருப்திகொள்கிறோம். ஆளும்கட்சி மக்களிடம் தன் செல்வாக்கைப் பெருக்கிக் கொள்வதற்காகச் செய்யும் 'ஸ்டண்ட்' இது என்று குற்றம் சாட்டியவர்களின் வாயை அடைக்கும் விதத்தில் சகல கட்சிகளையும் முதல்வரவர்கள் 'எழுச்சி'யில் பங்கு பற்றக் கோரியதிலும் திருப்தி அடைகிறோம்.

எனினும் பூரண திருப்தி அடையவில்லை. சேலம் உருக்காலை பற்றிச் சொல்லும்போது விசாகபட்டினம் உருக்காலை குறித்துக் கலவரம் நடந்தபோது ராஜாஜி கூறியதை மறப்பதற்கில்லை. "நாட்டின் குறிப்பிட்ட ஒரு பகுதியில் ஒரு பெரும் ஆலை அமைக்கப்படுவதால் அந்தப் பகுதியில் உள்ள ஒரு சிலருக்கு வேலை கிடைக்கிறது என்ற சிறிய அம்சம் தவிர, அந்த ஆலையின் பயன் குறிப்பிட்ட பிரதேசத்துக்குமட்டுமின்றித் தேசம் முழுவதற்குமே கிட்டுவதாகும். நாட்டின் எந்தப் பகுதியில் எந்த ஆலை அமைத்தாலும் அதன் பயன் தேசம் முழுவதற்கும் பொதுவானது. ஆனபடியால் தங்கள் பகுதிக்கே ஏதோ ஒரு ஆலையை அமைத்துத் தரவேண்டும் என்று வற்புறுத்துவதில் பொருளில்லை. இந்தியா ஒரு தேசம் என்ற கருத்தை மதிக்கும் வரையில் இத்தகைய விஷயங்களில் சக்தியையும் காலத்தையும் கழிப்பது அழகல்ல" என்று அவர் கூறினார். விசாகைக்குப் பொருந்துவது சேலத்துக்கும் பொருந்தும்.

இப்படி எழுதுவதால் நமக்கு நமது சொந்த மாநிலத்திடம் பற்றுக் குறைந்துவிட்டதாக யாரும் எண்ண மாட்டார்கள் என்று நம்புகிறோம். நமது அவசியமான உரிமைகளை நிலைநாட்ட ஆனவரையில் போரிடுவோம். உதாரணமாக ஹிந்தியைச் சிம்மாதனம் ஏற்றுவதற்காகச் செய்கிற முயற்சிகளால் தமிழ் மகன் அடையக்கூடிய இரண்டாந்தரக் குடிமை நிலையை எதிர்த்து வன்மையாகப் போரிடுவோம்.

ஆயின், நமது பிரதேசம் என்ற ஒரே காரணத்துக்காக அவ்வளவாக அவசியமற்ற இனங்களில் சக்தியை விரயமாக்குவானேன்?

இன்று தேசத்துக்கு அவசியமானது என்ன? நிச்சயமாக உருக்கிரும்பு அல்ல. ஏற்கனவே சர்க்கார் வசமுள்ள இரும்பாலைகளின் போக்கைப் பார்த்த பிறகு புதிதாக இன்னொன்று நிறுவுவதை அவசியம் என வற்புறுத்துவதற்கில்லை. எனவே, சேலமோ, விசாகையோ, பொகாரோவோ, எங்கிருப்பினும் கோடானு கோடிப் பணத்தை விழுங்கும் உருக்காலை தேவையில்லை என்பதுதான் இப்பொழுது வற்புறுத்தப்பட வேண்டிய விஷயம். இன்று அவசியமான பிரச்னை உணவு உற்பத்தியைப் பெருக்குவது, சாலை போடுவது, குடிநீர் வசதியை விஸ்தரிப்பது, கல்வி நிலையங்களை அதிகரிப்பது ஆகியவைதான். இவற்றில்தான் ராட்சத யந்திரங்களுக்குப் பதிலாக லட்சோப லட்சம் மக்கள் வேலை செய்து ஜீவனோபாயம் பெற முடியும். இத்தகைய ஆதாரத் தேவைகளைப் பூர்த்தி செய்யும் திட்டம் தவிர மற்ற எதற்கும் இப்போது மக்களைப் பிழிந்து வரி விதிப்பது அநீதி என்பதை மத்திய சர்க்காருக்கு எடுத்துக் காட்டுவதே இன்றைய அவசியத் தேவை. இதற்காக நமது முதன் மந்திரி அவர்கள் மற்ற காங்கிரஸல்லாத ராஜ்ய முதன் மந்திரிகளோடு சேர்ந்து 'எழுச்சி' காட்டுவாராயின் பாரத சரித்திரம் அவரை என்றென்றும் வாழ்த்தும்.

'பொகாரோ உருக்குத் திட்டத்தை நிறுத்திவிட்டு ராஜ்ய சர்க்காருக்கு அவசியமான உணவு மானியங்களைத் தள்ளி வழங்கலாம்' என்று திரு அண்ணாதுரை அவர்களே கூறியிருப்பதை இங்கு மகிழ்ச்சியுடனும், நம்பிக்கையுடனும் குறிப்பிடுகிறோம். சேலம் திட்டத்துக்கும் பொகாரோவைப் போல் அவ்வளவு பெரிய நிதியம் தேவைப்படவில்லை என்பது வாஸ்தவம். என்றாலும் இதற்குத் தேவைப்படும் நிதியமும் இன்று இதைவிட மிக மிக அவசியமான எத்தனையோ பயன் தரும் இனங்களில் செலவழிக்கப்படலாம். அல்லது எந்த இனத்திலும் செலவழிக்காவிடில், அந்த அளவுக்கு வரிகளும் கடன்களும் குறைக்கப்பட்டு நாட்டுக்கு நற்பயன் அளிக்கலாம். இவை யாவற்றையும் கருத்தில் கொண்டு, உத்தேச 'எழுச்சி'த் திட்டத்தைப் பெரிதுபடுத்தாமல் கட்டுப்படுத்தினால் மிகவும் விவேகமாக இருக்கும்.

தூத்துக்குடி துறைமுகமும் எழுச்சிக்குக் காரணமாகிய இன்னோர் இனம். இதைப் பற்றி ஏற்றுமதி, இறக்குமதி செய்யும் வர்த்தகத் துறையில் உள்ளவர்களிடம் ஆலோசனை கலப்பது நலம். தமிழகத்தின் துறைமுகங்கள் வழியாக ராஜ்யத்தின் ஏற்றுமதி இறக்குமதித் தேவைகள் எந்த அளவில் பூர்த்தி செய்யப்படுகின்றன என்பதை வர்த்தகத் துறையினர் நன்கு கவனித்துக் கூற முடியும். மற்ற ராஜ்யங்களுடன் இதனை ஒப்பு நோக்கி, நாம் அலட்சியம் செய்யப்படுவதாகத் தோன்றினால் அதை மத்திய அரசுக்கு ராஜ்ய அரசு வன்மையாக எடுத்துக் காட்டினாலே போதும். 'எழுச்சி' என்று பெரிய பெயரில் எதுவும் செய்ய வேண்டிய அவசியமில்லை.

தமிழகத்துக்குத் தந்த வாக்குறுதிகளை மட்டும் மத்திய அரசு புறக்கணிக்கிறது என்பதற்கு மேன்மேலும் ஆதாரம் கிடைக்குமாயின், அப்போது 'எழுச்சி'க்கு நிச்சயமாக ஆதரவு தரலாம். இப்போது தமிழகத்தின் சக்தியை வேறு அத்தியாவசியமான திசைகளில் திருப்பி விடுவோம்.



**காமகோடியின் அருள்மொழி**

தாமிரச் செம்பு இணைந்தில் பத்து வருஷம் கிடந்துவிட்டது என்றால் அதை எத்தனை தேய்த்தாக வேண்டும்? இவ்வளவு வருஷ காலம் எத்தனை கெட்ட காரியங்களைச் செய்து நம் சித்தத்தில் அழுக்கை ஏற்றிக் கொண்டுவிட்டோமோ, அத்தனை நல்ல காரியங்களைச் செய்து அழுக்கைத் தேய்க்க வேண்டும். நல்ல காரியங்கள் என்றால் வேதத்தில் சொல்லியுள்ள கர்ம அநுஷ்டானங்கள். இவற்றைப் பற்றின்றிச் செய்வதால் சித்தம் சுத்தமாகும். நல்ல சீலங்கள் உண்டாகும். 'ஞானம் தானே வேண்டும்? கர்மாநுஷ்டானங்கள் எதற்கு?' என்கின்றனர். 'பால் இருந்தால் போதாதா? பசு எதற்காக? பசு, அதன் சாணம், அதற்காக வைக்கோல், இவையெல்லாம் எதற்கு? பால் மட்டும்தானே வேண்டும்?' என்று கேட்பார்களா? கர்மத்தைப் பற்றின்றிப் புரிவதால் சீலமும் வரும். சித்தமும் சுத்தமடையும். சித்தத்தின் அழுக்கு நீங்கினால், அழுக்கு நீங்கிய கண்ணாடியில் பிம்பம் பிரகாசிப்பதுபோல், நமக்குள் பரமாத்ம ஸ்வரூபம் தானே பிரகாசிக்கும். 'சித்த மலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட' என்று இதைத்தான் மாணிக்கவாசகர் சொன்னார்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

சர்க்கார் உத்தியோகங்களுக்கு ஜாதி அடிப்படையில் ஆட்களைத் தேர்ந்தெடுப்பது பற்றிக் காங்கிரஸ் சட்டசபையாளர் ஒருவர் கேள்வி கேட்டபோது முதன் மந்திரி அவர்கள் 'சாதி வித்தியாசங்கள் மெல்ல மறைந்து வருகின்றன. ஆயினும் சாதி அடிப்படையில் அநுகூலங்கள் வழங்கப்படும் வரையில் இந்த வித்தியாசங்கள் இருக்கத்தான் செய்யும்' என்று விடையளித்துள்ளார். இவ்விஷயமாக இதைவிடச் சரியான வார்த்தைகளை இதுவரை யாரும் சொல்லியதில்லை. சிறிய பதில்தான். ஆனாலும் மிகச் சரியான வார்த்தைகளைக் கொண்ட பதில். அடிப்படை விவேகத்தை நன்கு உணர்ந்திருக்கும் சிறப்பை இப்பதிலில் காண்கிறோம்.

முன்னாட்களில் ஜாதி அமைப்பில் கீழ் மட்டத்தைச் சேர்ந்திருப்பது இழிவாகவும் பிரதிகூலமாகவும் கருதப்பட்டது. பிரதிகூல நிலையில் தாங்கள் இருப்பது பிறரது பரீட்சைக்கு உள்ளாகாதபடி சம்பந்தப்பட்டவர்களால் மறைத்துக் காக்கப்பட்டது. இப்போதோ பழைய பிரதிகூல நிலையில் இருப்பதே புதிய அநுகூலமாகி விட்டது. எனவே இதை மறைக்காமல் பின்தங்கிய வகுப்பிலும், ஷெட்யூல்ட் வகுப்பிலும் இடம் பெறுவதற்காகப் போட்டி ஏற்பட்டுள்ளது. பின்தங்கியவர்கள் விசேஷ உரிமைகள் கேட்பதற்காகவே பழைய ஜாதி வித்தியாசங்களைக் காப்பாற்றுவதிலும் தீவிர நாட்டம் காட்டப் படுகிறது. மகத்தான அரசியல் அறிவும், விசால மனப்பான்மையும், தயாளமும், தைரியமும் உள்ளவர்களால்தான் இப்பிரச்னைக்குத் தீர்வு காண முடியும். பின்தங்கியவர்களின் தலைவர்களாகத் தங்களைச் சொல்லிக் கொள்ளும் ஒருசிலர் பிரதிகூலம் ஒன்றையே சலுகையாக்கிக்கொள்ளாதபடி செய்ய வேண்டும். வேறு விதங்களில் அவர்களின் உண்மையான அபிவிருத்திக்கு உதவ வேண்டும். இவற்றைச் செய்து முடிப்பவருக்கு நான் சொன்ன சிறப்பியல்புகள் தேவை. தைரியத்தையும் இவற்றில் ஓர் இயல்பாகச் சொல்லியிருக்கிறேன் — ஏனெனில் வாக்குச் சீட்டைச் சார்ந்துள்ள ஆட்சி முறையில் குறிப்பிட்ட வர்க்கங்களின் தலைவர்களுடன் மாறுபாடு கொள்வதற்குத் தைரியம் அத்தியாவசியம்.

வெகு நாட்களுக்கு முன்பு ஒரிஸ்ஸாவின் ஆதிவாசி மந்திரி யொருவருக்கு நான் எழுதியதை இந்தச் சந்தர்ப்பத்தில் நினைவுகூர்கிறேன்:

> நம் மக்களில் பின்தங்கியவர்கள் மனப்பூர்வமாக உழைத்து முன்னேறுவதற்கு ஊக்கமளிக்கும் வகையில் 'செய்கிற காரியங்கள்தாம் அவர்களுக்கு உண்மையான, நிரந்தரமான நலனை உண்டாக்கும்; இயற்கையாகத் தோன்றும் கருணையை மிகைப்படுத்திக் காட்டும் காரியங்களல்ல. அவர்களுக்குச் சுலபமான அநுகூல வாய்ப்புகளைத் தருவதால் சிறிது காலத்துக்கு அவர்களை மகிழ்விக்க முடியும். நம்முடைய கருணை உணர்வைப் பூர்த்தி செய்து கொண்டோம் என்று திருப்திப்பட்டுக் கொள்ள முடியும். அதோடு சரி. ஆனால், இவ்வாறு சிரமமின்றி அவர்களுக்கு அநுகூல நிலை ஏற்படுத்துவதால் பின்தங்கிய வகுப்புகள் என்றைக்கும் அந்தப் பெயரில் நிலைப்பட்டுவிடும். அவர்கள் தொழிலூக்கத்துடன் தங்களை ஈடுபடுத்திக் கொண்டு முன்னேறுவதற்கு வழி செய்தாலே ஆழப் புதைந்துள்ள அவர்களது உண்மையான திறமைகள் யாவற்றையும் வெளிக் கொணர்ந்து பயன்பெற முடியும். மற்றவர்களோடு அவர்களும் போட்டியிடச் செய்வதே முன்னேற்றத்தின் இரகசியம். பல தலைமுறைகளாக வளர்ச்சியுறாமல் புதைக்கப்பட்ட திறமைகள் வெளிப்படுவதற்கு உதவுவதே நம் மனோபாவமாக வேண்டும். எவருமே தமது பிறப்பாலோ, இனத்தாலோ மாற்ற வொண்ணாதபடி இழிநிலையில் இல்லை. ஊக்குவதையும், போட்டியில் ஈடுபடச் செய்வதையும் பொறுத்ததே, ஒருவரது இழிநிலையை மாற்றி உட்சிறப்பை வெளியாக்குவது. எவ்வித முயற்சியுமின்றி அநுகூலங்களைப் பெறச் செய்தால், அவ்வாறு அநுகூலம் பெறுபவர்களைத் தொடக்கத்திலிருந்தே வாழ்க்கைக்கு உதவாத விதத்தில் உருவாக்கி, அவர்களது வளர்ச்சியை நாசம் செய்து விடுவோம்.

சென்னை முதல்வரின் பொருள் பொதிந்த சிறிய பதிலில் நான் சொன்ன அனைத்தும் அடங்கியுள்ளது. சமூகத்தை முறைப்படி சீர்திருத்துவதாக நம்பிக்கை கொண்டிருக்கும் சிலருக்கு இந்தக் ' கருத்து ருசிக்காது. பின்தங்கியவர்களின் முன்னேற்றத்தையும் க்ஷேமத்தையும் தடுப்பதே இக்கருத்துக்களின் நோக்கம் என்று அவர்கள் கண்டனம் செய்வார்கள். விவேகமற்றவர்கள் விவேகத்தை என்றுமே தவறாகத்தான் கருதியிருக்கிறார்கள். வெறுப்பும், கோபமும் விவேகத்தை மங்கச் செய்து, வகுப்புத் துவேஷங்களை அதிகமாக்குபவை. வெறுப்பும் கோபமும் வேறு, சமூக சீர்திருத்த உணர்ச்சி வேறு. என்னுடைய மிகச் சிறந்த — மிகவும் உண்மை நிரம்பிய - சகாக்கள் சிலரும் இதில் தவறாகச் சென்றிருக்கிறார்கள்.

சிலரை ஒதுக்கி வைக்கும் முறை பிரத்யட்சத்தில் மறைந்து வரும்போது, இதைப் பற்றி அதிகம் வலியுறுத்தாதிருப்பதே நல்லது. மனோதத்துவ ரீதியில் மட்டுமே 'ஒதுக்கல்' ஓரளவு உள்ளது. கோபத்தைக் கிளப்புவதால் இந்த மனப்பண்பு வளர்ந்து, ஒதுக்கலுக்குத் தீர்க்காயுள் தந்ததாகும்.

ஃஃஃ

ஒவ்வொரு மாவட்டத்திலும் ஆயிரம் பேர் கொண்ட சுபிட்சப் படைகளை நிறுவத் தமிழ் நாட்டு அரசாங்கம் உத்தேசித்திருக்கிறது. இந்தப் படையின் மீது சர்க்கார், மக்கள் இருவரும் உன்னிப்பான கவனம் வைத்திருக்க வேண்டும். இது ஓர் அரசியல்

அமைப்பாக உருவாகிவிட அனுமதிக்கலாகாது. கபிட்சம் ஏற்படுவதன் சூட்சமத்தை அறியாமல் கட்சி தலைமை மட்டுமே அறிந்த இளைஞர்கள் இப்படையில் பெருவாரியாகச் சேரக் கூடும். சிறிது காலத்தில் இவர்கள் அரசாங்கத்துக்கே முள் தைத்தாற் போல் உபத்திரவம் தரக் கூடும். புதிய தலைவர்கள் படையின் அதிகார ஸ்தானங்களில் அமர்ந்து விடக் கூடும். மக்களுக்கு என்ன செய்ய வேண்டும் என்பதில் இவர்கள் தமது கருத்துக்களுக்குப் பொறுப்பு ஏற்பார்களா, பொறுப்பற்றிருப்பார்களா என்று கேட்டால் இரண்டும் சம அளவில் சாத்தியமாகும். நடைமுறை அறிவு பெற உலகில் இப்போதே போதிய முன்னோடிகள் உள்ளன. 'கபிட்சப் படை' போல உள்ளார்ந்த சக்தியுடைய அமைப்புக்களை ஒழுங்கீனத்தில் ஊறிவிடத் தயாராக நாட்டில் ஒரு கட்சி இருப்பதை மறக்கலாகாது.

* * *

புத்தியில் அவ்வப்போது தோன்றும் எண்ணங்கள் யாவுமே நற்பலனளிப்பவையாக இரா. பல ஆபத்தாகக் கூட முடியும். சாதக — பாதகமான விளைவுகளை யெல்லாம் ஆராய்ந்து, போதிய அடிப்படைகளின் மீதே திட்டங்கள் வகுக்கப்பட வேண்டும். அதிகாரிகளிடமிருந்து குறிப்பிட்ட விஷயத்தில் எல்லாத் தகவல்களும் பெற்று எதிர் விளைவுகளை அவர்களுடைய உதவியுடன் கலந்தாலோசித்தே தமிழ்நாட்டு அரசாங்கம் தனது திட்டங்களை அமைக்க வேண்டும். இதற்குத் தேவைப்படும் அமைதியான அவகாசத்தை நமது ராஜ்ய சர்க்காருக்குத் தி. மு. க. அபிமானிகளும் ஆதரவாளர்களும் அளிக்க வேண்டும் என்று மனப்பூர்வமாகக் கேட்டுக் கொள்ளுகிறேன். 'இது வேண்டும்' 'அது வேண்டும்' என்று கேட்கிற கட்சி அங்கத்தினர்களுடனேயே மந்திரிகள் நாள் முழுவதையும் செலவழிக்க நேர்ந்தால், ராஜ்யத்தின் ஒரு மொத்தமான விவகாரங்களைப் புறக்கணிக்கவோ, அவசரமாகப் பைசல் செய்யவோ நேரிடும். தி. மு. க. ஆட்சிக்கு வந்தபோது சொன்னதையே மீண்டும் சொல்கிறேன். செக்ரிடேரியட் தாழ்வாரங்களில் கூட்டம் சேராமல் அமைதி நிலவட்டும். மந்திரிமார்களின் வீட்டு வாசலில் 'பிரத்தியேகப் பேட்டி' கேட்கிறவர்கள் யாரும் இருத்தல் கூடாது. பொது மக்களின் நம்பிக்கையை மிகவும் பெற்ற ஒரு மந்திரி மட்டும் பழைய கவர்ன்மெண்ட் ஹவுஸ் எஸ்டேட்டில் குறிப்பிட்ட ஒரு கால அளவில் இத்தகைய பேட்டிகள் கொடுக்கலாம். மந்திரிகள் எத்தனையோ சவால்களைச் சமாளித்தாக வேண்டியிருக்கிறது. அவர்கள் அமைதியாகச் சிந்திக்கவும் பக்குவமான ஆலோசனைகள் பெறவும் முழு வாய்ப்பு அளிக்கப்பட வேண்டும்.

* * *

உற்பத்தியின் ஊற்றுக் கண் தொழிலாளரின் உழைப்பு மட்டுமே என்று கூறினார் கார்ல் மார்க்ஸ். மூலதனம், நிர்வாகம் இவற்றை அவர் புறக்கணித்து விட்டார். மார்க்ஸின் கொள்கை வர்க்க துவேஷங்களைத் தூண்டி விடத்தான் உதவுமே யன்றி முழு உண்மையும் ஆகாது. உழைப்பாளிகளின் முயற்சியால் உற்பத்தியாகும் செல்வத்தில் ஏறக்குறைய முழுவதும் அவர்களுக்கே சென்றுவிடும். கணிசமான அளவில் புதிதாகச் செல்வம் உற்பத்தியாக வேண்டுமாயின் அதற்கு முதலீட்டாளரின் தைரியமும், தீர்க்க திருஷ்டியும், அறிவும், நிர்வாகத் திறனும் அவசியம். மனித சக்தி, மூலப் பொருள்கள், இயந்திரம், விற்பனை வசதி, பணம், நிலம் யாவும் சேர்ந்தால்தான் செல்வம் உண்டாகும். நல்ல முதலீட்டாளர் இவ்வனைத்தையும் ஒன்று சேர்க்க முடியும். திறமையற்ற முதலீட்டாளரோ செல்வத்தை உண்டாக்குவதற்குப் பதில் அழித்து விடுவார்.

* * *

''சுதந்திர சமூகத்தை இயக்கும் சக்திகளைச் சில வகையான பொருளாதாரக் கட்டுப்பாடுகள் ஏன் முடக்கி விடுகின்றன என்பதை நாம் உணர்ந்தால்தான், நாம் விரும்பாத சூழ்நிலையில் நம்மைக் கொண்டு சேர்த்து விடாத திட்டங்களைப் பரிசோதனை செய்து பார்க்கலாம்'' என்று பேராசிரியர் ஹயெக் அவர்கள் தமது 'அடிமை வாழ்வுக்கு வழி' (The Road to Serfdom) என்ற நூலின் முகவுரையில் கூறுகிறார். பாங்குகளைச் சர்க்கார் உடைமையாக்க வேண்டும் என்கிற உத்தேசத்துக்கு மிகவும் பொருத்தமான ஒரு நல்லுரை இதுவே. தனியார் செய்கிற தொழில்களில் பலவற்றைச் சர்க்கார் திறம்படச் செய்ய முடியும் என்றே வைத்துக் கொண்டாலும் கூட, சர்க்காரின் எல்லைக்கு அப்பால் ஒரு குறைந்தபட்சத்தையாவது மிச்சம் வைத்திருப்பது அத்தியாவசியம். சக்கரங்களின் மீதே வண்டி ஓட வேண்டும். சக்கரங்களையும் வண்டிக்குள் இழுத்துக் கொண்டு விட்டால் வண்டி நகர முடியாது.

* * *

உத்தரப்பிரதேச சர்க்கார் அந்த ராஜ்யத்தில் நில வரியை நீக்க முடிவு செய்திருப்பதாக யு. என். ஐ. செய்தி ஸ்தாபனத்தின் தகவல் கூறுகிறது. ராஜ்ய முதன் மந்திரி ஸ்ரீ சரண் சிங் இவ்வாறு ஜூன் 27ந் தேதி சட்ட சபையில் அறிவித்தாராம். நியாயமான, நாட்டுப் பற்றுள்ள, தைரியமான நடவடிக்கை. விவசாயிகள் உற்சாகமடைந்து உணவு உற்பத்தியைப் பெருகச் செய்வதற்கு இன்னும் பல நடவடிக்கைகள் எடுத்தாக வேண்டும். உணவு உற்பத்திக்குத்தான் எல்லாத் தொழில்களையும் விடக் கடினமான உழைப்பும், பெரிய அளவில் ஊக்கமும் அவசியம் என ஆங்கில அறிஞர் பர்க் சொன்னதை நினைவு கொள்வோம்.

இந்தியாவை ஆலைத் தொழில் மயமாக்க எண்ணிய திட்டங்கள் தோற்று விட்டன. ஆயினும் ஆலைத் தொழில் மயமாகிவிட்ட நாடுகளுடன் போட்டி போட்டுக் கொண்டு நம்மையும் உணவுப் பண்டங்களை இறக்குமதி செய்ய வைப்பதில் இத்திட்டங்கள் வெற்றி கண்டுள்ளன.

# பொறுங்கள்!

**துணிகள்
சீக்கிரமே உடுக்க
தகுதியற்றதாய்
போவதைப்பற்றி
கவலைப்படுகிறீர்களா?**

கவலையை விடுங்கள். டுவின் டஸ்கர் துணிகளை வாங்குங்கள். இந்த ரக துணிகள் உங்களுக்குப் பிடிக்கும் ... உறுதியானவை, நீடித்து உழைப்பவை. அதி நேர்த்தியாய் தயாரிக்கப்பட்டவை. விலையிலும் நயமானவை. இவை எல்லாம் மதுரை மில்ஸாரின் பெரிய அளவு உற்பத்தி சௌகரியங்களால் சாத்தியமாகின்றன. ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்—டுவின் டஸ்கர். நயமான விலையில் தரமுள்ள துணிகள்.

**ஹார்வி**



## டுவின் டஸ்கர்

பாப்ளின் • டிரில் • லாங்கிளாத்

**நயமான விலையில் தரமுள்ள
துணிகள்**

மதுரை மில்ஸ் கம்பெனி லிமிடெட்,
மதுரை.
மானேஜிங் ஏஜண்டுகள்:
ஏ. & எப். ஹார்வி லிமிடெட்





# வளர்ந்தோங்கும் தொழிலகம்

'பலன் கருதாமல், பாராட்டுக்களை எதிர்பாராமல், கடுமையாகவும உண்மையாகவும் உழைப்பதே எங்கள் லட்சியம்'' என்று கூறினார் தொழில் வளர்ச்சிக்குத் தத்துவம் அமைத்துத் தந்த தொழில் செம்மல் காலஞ்சென்ற எஸ். அனந்தராம கிருஷ்ணன். பிறருக்கு மட்டும் போதிக்காது தமது வாழ்க்கை லட்சியமாகவே இந்தத் தத்துவத்தைக் கடைப்பிடித்து நேர்மைக்கு எடுத்துக் காட்டாக வாழ்ந்தவர் அவர். இந்த அடிப்படையில் எழுந்த 'அமால்கமேஷன்ஸ்' ஸ்தாபனத்தின் கீழ் இணைந்து அமைந்துள்ள தொழில் நிறுவனங்கள் இருபதுக்கு மேல் உள்ளன. ஒவ்வொன்றும் தொழிற்சாலை எப்படி நடத்தப்பட வேண்டும் என்பதற்கு எடுத்துக்காட்டாக விளங்குவது. இவற்றில் ஒன்றான இந்தியா பிஸ்டன்ஸ் தொழிற்சாலையின் இரண்டாவது கட்ட விஸ்தரிப்பைச் சென்னை முதலமைச்சர் திரு ஸி. என். அண்ணாதுரை சென்ற 19-6-67 அன்று செம்பியத்தில் தொடங்கி வைத்தார். சுமார் ஐயாயிரம் தொழிலாளர்கள் கூடியிருக்க மங்கல வாத்திய இசையுடன் கோலாகலமான பெரு விழாவாக விளங்கியது இந் நிகழ்ச்சி.

இத் தொழிற்சாலையின் பதினெட்டு ஆண்டுகள் சரித்திரத்தில் இது ஒரு பொன்னான நாள். ஆம், பதினெட்டு ஆண்டுகளுக்கு முன் இத்தொழிற்சாலை தொடங்கப்பட்டது. திட்டங்கள் வகுக்கப்படாத காலம் அது. நாட்டில் மோட்டார்த் தொழில் எவ்வாறு வளர்ச்சியுறும் என்று யாரும் நிர்ணயம் செய்யாத காலம். அந்தக் காலத்தில், மோட்டார்த் தொழிலுக்கு இன்றியமையாத 'பிஸ்டன்'கள், 'லைனர்'கள், 'ரிங்கு'கள் போன்ற உறுப்புக்களைத் தயாரித்தளிக்க நிறுவப்பட்டது இந்தத் தொழிற்சாலை. ஆமாம்; அனந்தராமகிருஷ்ணன் அவர்களுடைய தீர்க்க தரிசனத்தினால்தான்.

இன்று இது அடைந்துள்ள வளர்ச்சியை ''அற்புதம்'' என்றே சொல்ல வேண்டும். 1962ல் முதல் கட்ட விஸ்தரிப்பில் உற்பத்தி இரு மடங்காகப் பெருகியது. 1967-ல் இரண்டாவது கட்டத்தில் ஆறு மடங்காக உயர்ந்தது. இப்போது ஆண்டுக்குப் பதினைந்து லட்சம் பிஸ்டன்களும், மூன்றரை லட்சம் ரிங்குகளும் உற்பத்தியாகின்றன. நம் நாட்டில் ஓடிக் கொண்டிருக்கும் மோட்டார், லாரி, பஸ், இவற்றில் ஐந்தில் நான்கு வண்டிகளில் இந்தியா பிஸ்டன்ஸ் தயாரித்தளிக்கும் உறுப்புக்கள் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன. எத்தனை விதங்கள், ரகங்கள் தேவைப்பட்டாலும் — சுமார் முந்நூறு ரகங்களுக்கு மேல் இருக்கின்றன என்று ஓர் அதிகாரி விளக்கினார் — அவற்றையெல்லாம் அளவுப்படியும் தரக் கட்டுப்பாட்டுடனும் செய்து கொடுக்கிறது இந்தத் தொழிற் சாலை. புதிதாக ஏதாவது ரகங்கள் தேவைப்படுமாயின், அவற்றைச் செய்யும் ஆற்றலையும் உபகரணங்களையும் பெற்றிருக்கிறது இத்தொழிலகம். இந்தத் துறையில் நம் நாட்டின் தேவை முழுவதையும் பூர்த்தி செய்யக்கூடிய நிலையில் இத்தொழிற்சாலை

இருக்கிறது என்பதை உற்சாகத்துடன் உணர முடிகிறது.

இங்கே நிகழ்ந்துள்ள அற்புதங்களை மிகத் தெளிவாக, பெருமிதத்துடன் விளக்கினார் எம். அனந்தராம கிருஷ்ணனின் மூத்த புதல்வர் திரு ஏ. சிவசைலம். அவற்றில் ஒரு சிலவற்றை அறிந்தாலே உள்ளம் உவகையுறும். தொழில் முன்னேற்றம் அடைந்துள்ள இத்தாலி, ஜெர்மனி, இங்கிலாந்து, போலந்து, செக்கோஸ்லோவாகியா போன்ற நாடுகளுக்கு இந்தியா பிஸ்டன் தயாரிப்புகள் ஏராளமாக ஏற்றுமதியாகின்றன. மேலை நாடுகளில் தயாராகும் உறுப்புக்களுக்கு இவை எள்ளளவும் குறைந்தவையல்ல என்று அவர்கள் ஏற்றுக் கொள்கிறார்கள். ''மேனர்'' இணைப்புக்கு வேண்டிய எல்லா உறுப்புக்களும் இங்கேயே ஒரே இடத்தில் செய்யப்படுகின்றன. உற்பத்திச் செலவு மிகவும் குறைவுதான். இறக்குமதி செய்தால் என்ன விலை ஆகுமோ அதைவிட 15 அல்லது 20 சதம் குறைவு. இது அசாதாரணமான சாதனை! அரசாங்கமே நிர்ணயம் செய்து அனுமதித்துள்ள அடக்க விலைக்கும் நாற்பது சதம் குறைவாக இத் தொழிற்சாலையில் உற்பத்தி நிகழுகின்றது. இந்த விலைக் குறைவின் பயனைத் தாங்களே அடையாமல், உபயோகிப்போர்களுக்கு மலிவாகக் கிடைக்கும்படி விற்பனை செய்கிறார்கள்! அரசாங்க வரி விதிப்புகள் அல்லது இதர காரணங்களால் புதுச் சுமைகள் ஏற்க நேர்ந்தாலும், சிக்கனத்திலும் உற்பத்தித் திறனிலும் இச்சுமைகளைத் தாங்களே ஏற்றுக் கொண்டு, விலை உயர்வைத் தடுத்திருக்கிறார்கள். தொழிலாளர்களின் ஊதியம் சராசரி மாதம் 375 ரூபாய். ஒரு தொழிற்சாலைத் தொழிலாளி இவ்வளவு உயர்ந்த ஊதியம் பெறுவது தென்னகத்திலேயே இந்த ஓரிடத்தில்தான். தொழிலாளர்களின் எண்ணிக்கையும் சுமார் 2500க்கு உயர்ந்துள்ளது. தொழிற் சாலையில் ஜாதி மத அடிப்படையில்லாது திறமைக்கும் ஆர்வத்துக்கும் முதலிடம் அளிக்கப்படுவதால், உண்மையான சம வாய்ப்பு எல்லோருக்கும் கிட்டியுள்ளது. ஒவ்வொருவரும் முழுப் பயிற்சி பெற்றவர்; திறமை மிக்கவர்; பிறர் உதவியின்றிச் செயலாற்றும் வல்லுநர். முதல் கட்ட விஸ்தரிப்பும், இரண்டாவது கட்ட விஸ்தரிப்பும் புதிய கட்டடம் எழுப்பாமலே செய்யப்பட்டுள்ளன. இது விசேஷம். சிக்கனத்தைக் கருதி இப்போதுள்ள கட்டடங்களிலேயே, இருக்கும் இடத்தில் இயந்திரங்களை வரிசை வரிசையாக அமைத்துள்ளார்கள். இப்படிச் செய்தும் இதற்குப் போடப்பட்டுள்ள மூலதனம் நாலரைக் கோடி ரூபாய். இவ்வளவையும் ஆடம்பரமின்றி, விளம்பரமின்றி, பிறர் தயவோ உதவியோ யின்றித் தங்களுக்குள்ளாகவே சமாளித்துக் கொண்டுள்ளார்கள். எங்கு திரும்பினாலும் திறமையும், தன்னம்பிக்கையும் நிறைந்து காணப்படுகின்றன.

இவற்றைக் காணும்போது ஒவ்வொரு கணமும் அனந்தராமகிருஷ்ணனின் நினைவு வந்து நம் மனத்தை நெகிழச் செய்கிறது. நம்மைவிட அதிகமாக 2500 தொழிலாளர்களும், அதிகாரிகளும் நன்றியுடன் அவரை நினைந்து உள்ளம் உருகுகிறார்கள். தாங்களாகவே சிறுகச் சிறுக நிதி திரட்டி அனந்தராம கிருஷ்ணனின் உருவச் சிலையை இத் தொழிற்சாலையில் எழுப்பி அஞ்சலி செய்திருக்கிறார்கள். இச் சிலையைத் திறந்து வைத்த சென்னைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் டாக்டர் ஏ. லட்சுமணஸ்வாமி முதலியார் அனந்தராமகிருஷ்ணனுடைய நேர்மை பற்றியும், தொழிலாளர்களிடம் அவர் நடந்து கொண்ட விதம் குறித்தும், தனியார்த் துறைத் தொழில்களின் மேன்மை பற்றியும் உணர்ச்சியுடன் பேசினார். திரு அனந்தராம கிருஷ்ணனின் பெருமை பற்றியும், அருமையான பண்புகளைப் பற்றியும் முன்னுரையாக திரு எம். கே. ராஜு பேசக் கேட்ட போது, பந்தலில் குழுமியிருந்த எல்லாருமே உணர்ச்சி வசப்பட்டனர்.

ஸ்ரீ எம். கே. ராஜுவின் தொழில் திறமையும் கருத்துத் தெளிவும் செயல் நேர்த்தியும் தொழிற்சாலை முழுவதிலுமே ஊடுருவிச் செல்கிறது என்றே சொல்லலாம். அவர் இந்தத் தொழிற்சாலை பற்றி உண்மையிலேயே பெருமைப்பட வேண்டியவர். இதன் வளர்ச்சிக்கு அவர்தான் ஆணி வேர்.

திரு சிவசைலத்தின் பேச்சில்தான் என்ன அழுத்தம், என்ன நம்பிக்கை! அசாதாரணமான காரியங்களைக்கூட அநாயாசமாகச் செய்தது போன்ற பாவனையுடன் தொழிற்சாலையின் பிரதான அம்சங்களை அவர் விளக்கியபோது தம்முடைய தந்தையாரையே அவர் நினைவூட்டினார். அவருடைய உயர் நிர்வாகத்தின் கீழ், இந்தியா பிஸ்டன் மேலும் பல விஸ்தரிப்புக்களை நிகழ்த்த வேண்டும் என்றுதான் எல்லோரும் ஆசி வழங்கினார்கள்.

தனியார்துறைத் தொழில் என்பதற்கு எடுத்துக்காட்டாக, தனியாகவே ஆரம்பித்து, தனியாகவே வளர்த்து, தனியாகவே இடையூறுகளையெல்லாம் சமாளித்து, தனியாகவே இத் தொழிலை முன்னேற்றமடையச் செய்த அனந்தராமகிருஷ்ணனை முதலமைச்சர் திரு சி. என். அண்ணாதுரை பாராட்டிய போது, அங்கு குழுமியிருந்த அனைவரின் கருத்தையும் பிரதிபலித்தார்.

மேலும் மேலும் இந்தத் தொழிற்சாலை வளரும் என்பதற்குத் தொழில் அமைச்சர் நெடுஞ்செழியன் திறந்து வைத்த ஆராய்ச்சிக் கூடம் சான்றுகூறுகிறது. புதுப் புது ரகங்களை உருவாக்கவும், ஏற்கனவே இயங்கிக் கொண்டிருக்கும் பிஸ்டன் வகைகளின் தரத்தை அதிகரிக்கவும், முன்னேற்றங்களைப் புகுத்தவும், இவ்வாராய்ச்சிச் சாலை மிகவும் பயன்படும் என்று அமைச்சர் மன நிறைவுடனேயே குறிப்பிட்டார்.

''நெஞ்சுக்கு நீதி'' என்ற பாரதியாரின் பாடலை ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி பிரார்த்தனை கீதமாகப் பாடியது விழாவுக்கு மிகவும் பொருத்தமாக அமைந்திருந்தது. தொழிலாளர் சார்பில் திரு குருமூர்த்தி கூறிய கருத்துக்கள் இத் தொழிற்சாலையை அமைத்து நடத்தும் நிர்வாகிகளின் கருத்துக்களுக்கு இசைந்ததாகவே இருந்தன. இந்தியா பிஸ்டனின் வருங்காலம் மேலும் வளமுள்ளதாக ஆகட்டும்.



தமிழக 67 — 68ம் ஆண்டு வரவு செலவு அறிக்கையை முதலமைச்சர் ஜூன்மாதம் 17ம் நாள் தமிழக சட்டப் பேரவையின் முன் வைத்தார். இதைத் தொடர்ந்து பொது விவாதம் நடைபெற்றது. அறிக்கையின்மீது நடந்த உரைகளையும், இடையிடையே மந்திரிகள் குறுக்கிட்டுப் பதில் சொன்ன முறைகளையும், கடைசியாக முதலமைச்சர் அவர்கள் நிகழ்த்திய முடிவுரையினையும் கேட்டவர்கள், பாரத மக்கள் தங்களுக்குத் தாங்களே அளித்துக் கொண்ட சமஷ்டி ஆட்சி நன்கு செயல்படத் தொடங்கியுள்ள புதிய சகாப்தம் இது என்று எண்ணி மகிழத் தவறியிருக்க மாட்டார்கள்.

காங்கிரஸ் ஆட்சியை எதிர்த்து வந்த தி. மு. க.வினர் பதவிக்கு வந்தால் மது விலக்குப் போய்விடும் என்று நினைத்தவர்களும், சொல்லிக் கொண்டிருந்தவர்களும் முதலில் அவமானம் அடைந்தார்கள். பட்ஜெட் சமர்ப்பிப்பதற்கு முன்னால் நடந்த கேள்வி நேரத்தில் மதுவிலக்கைத் தளர்த்தப்போவதில்லை என்ற நமது முடிவு மிக உறுதியானது. சிறிதும் சந்தேகத்துக்கு இடமில்லாதது என்பதைத் திரு அண்ணாதுரை தெளிவுபடுத்திவிட்டார்.

# புதிய சகாப்தம்

அமைச்சர் கருணாநிதி அவர்களிடம் சிறிது காலத்துக்குமுன் பேசிக்கொண்டிருந்தபோது, புதிய கட்சி தமிழகத்தில் ஆட்சிக்கு வந்திருப்பதால் சட்டசபை நடவடிக்கைகள் குறித்து மக்களுக்கும் பத்திரிகைப் பிரதிநிதிகளுக்கும் புது உற்சாகமும் ஆர்வமும் தோன்றியிருப்பதாகக் குறிப்பிட்டார் நண்பர் ஒருவர்.

"இதை நானும் வரவேற்கிறேன். ஆனால் புதிய சூழ்நிலையில் சட்டசபை விவாதங்கள் முன்னைவிட சுவாரசியமாக இருக்கும் என்று கூறுவதற்கில்லை" என்றார் திரு கருணாநிதி. தொடர்ந்து அவரே காரணமும் சொன்னார். "காங்கிரசில் முதல்தரமான தலைவர்கள் அனைவரும் தேர்தலிலே வீழ்ந்து விட்டார்கள். ஆளும் கட்சித் தலைவர்களை எதிர்த்துச் சமதையாக நின்று தைரியமாகப் பேச ஆட்கள் அநேகமாக இல்லை என்றே சொல்லி விடலாம். அதனால் வாதப் பிரதிவாதங்களில் சூடு பிடிப்பது சிரமம்" என்றார்.

இது நூற்றுக்குத் தொண்ணூற்றைந்து சதவீதம் உண்மை என்றே தோன்றியது சட்டசபை நடவடிக்கைகளைக் கவனித்தவர்களுக்கு. மேல் சபையில் திரு ஆர். வெங்கடராமனுக்கும் அண்ணாதுரைக்கும் இடையில் நிகழ்ந்த ஒரு சொற்போரைத் தவிர மற்ற சந்தர்ப்பங்களில் அண்ணாதுரை அவர்களின் ஆணித்தரமான பதில்களும் உரைகளும் எதிர்த்தரப்பில் அனைவரையும் பெட்டிப் பாம்பாக அடக்கி விட்டன என்றே சொல்லலாம்.

எப்படியெல்லாம் நகைப்புக் கிடமளிக்கும் வகையில் கேள்விக் கணைகள் வந்தன!



''மதுவை அருந்துவதால் உடலுக்கு நன்மை என்று சில டாக்டர்கள் கருதுகிறார்களே!''

''மதுவிலக்கை நீக்கிவிட்டால் சர்க்காருக்கு அதிக வருவாய் கிடைக்குமே!''

''கள்ளச் சாராயம் காய்ச்சிக் குடிக்கும் குற்றம் அதிகப்படுவதால் மதுவிலக்கை ரத்துச் செய்துவிடலாமே!''

''வேறு சில ராஜ்யங்களில் காங்கிரஸ் அரசாங்கங்களே மதுவிலக்கை நீக்கிவிடும்போது, இந்த அரசாங்கம் ஏன் எடுக்கக் கூடாது?''

எல்லாவற்றுக்கும் திரு அண்ணாதுரை அவர்கள் உறுதியாக நின்று பதிலளித்தார்.

சமுதாய நலனைக் கருதி, அரசாங்கத்துக்கு நஷ்டம் ஏற்பட்டாலும் மதுவிலக்கை அமுல் செய்ய வேண்டியதுதான் என்று உரைத்தார்.





''மதுவிலக்குத் திட்டத்தை மற்றப் பகுதிகளிலுள்ள காங்கிரஸ் அரசாங்கங்கள் கைவிடும்போது : உறுதியாகத் தி. மு. க. அரசாங்கம் அமுல் நடத்துவதைப் பார்த்து மத்திய காங்கிரஸ் அரசாங்கம் பாராட்டி நிதி உதவி அளித்தால் வரவேற்போம்'' என்றும் முதலமைச்சர் கூறினார். இதைக் கேட்டு நாட்டில் நாலு காங்கிரஸ்காரர்களாவது வெட்கப்பட்டிருந்தால் சத்தியம் அந்தக் கட்சியில் இன்னும் கொஞ்சம் ஒட்டிக் கொண்டிருக்கிறது என்ற முடிவுக்கு வந்து மகிழலாம் நாம்.

ஃ ஃ ஃ

1967–68ம் ஆண்டு நிதி நிலை அறிக்கையைப் படித்து முடிக்க முதலமைச்சருக்குக் கிட்டத்தட்ட இரண்டு மணி நேரம் பிடித்தது. தெளிவான தமிழில் தங்கு தடையின்றி அவர் படித்துக் கொண்டே போனார். இடையிடையில் நா வறண்டபோது பக்கத்தில் கிளாஸ் தம்ளரில் வைத்திருந்த தண்ணீரை ஒவ்வொரு வாய் குடித்து விட்டு மேலே படித்தார்.

பட்ஜெட் விவாதம் தொடங்கிய அன்று காங்கிரஸ் தரப்பில் முதலில் பேசிய திரு மார்ட்டின் கேலி செய்யும் வகையில் சில விஷயங்களைக் குறிப்பிட்டார். இப்பகுதியைச் சட்டமன்ற விவாத நகல்களிலிருந்து அகற்றிவிட வேண்டும் என்று எதிர்க் கட்சித் தலைவர் திரு கருத்திருமனே கேட்டுக் கொண்டார். உடனே முதன் மந்திரி குறுக்கிட்டு, கனம் அங்கத்தினர்கள் 'எவ்வளவு தரமான முறை'யில் விவாதங்கள் நடத்தி

னார்கள் என்பது பதிவு செய்யப்பட வேண்டும்; அகற்றக் கூடாது என்று கேட்டுக் கொண்டார்!

இப்படி எத்தனையோ சுவையான சம்பவங்கள் நிகழ்ந்தன. மேல் சபையில் திரு ஆர். வெங்கடராமன், தி. மு. க.வும் தேர்தலுக்கு பஸ் அதிபர்களிடமிருந்து நிதி உதவி பெற்றிருக்கிறது என்று கூறியவுடன், திரு அண்ணாதுரை எழுந்திருந்து முழு விவரம் கூறும்படி வற்புறுத்தினார். இதற்கு திரு ஆர். வி. தாம் சர்ச்சைகளில் புக விரும்பவில்லை என்றார். ''சர்ச்சைகளைக் கிளப்பி விடுகிறீர்கள்; ஆனால் அவற்றில் ஈடுபடுவதில்லை'' என்றார் அண்ணாதுரை. ''அதற்கென்ன செய்ய? என் தோட்டத்தில் வந்து விழுந்த பந்தை உதைக்காமல் விடுவேனா?'' என்றார் ஆர். வி. இவ்விதம் கடைசிச் சொல்வம்பு ஆர். வி. யிடமிருந்து புறப்பட்டது என்றாலும் அது கூர்மழுங்கிய ஒன்றாகத்தான் இருந்தது.

திரு அண்ணாதுரை எந்தக் குற்றச்சாட்டையும் நேர்முகமாக எதிர்க்கத் துணிச்சல் உள்ள தீரர் என்பதை இந்தச் சம்பவம் நிலைநாட்டியது.

காங்கிரஸ் அக்கிராசனர் திரு காமராஜ் அவர்களுக்கு அரசாங்கச் செலவில் எழுத்தர் நியமிக்கப்பட்டிருக்கிறாரா என்ற கேள்விக்கு ''இல்லை'' என்றும், அதைத் தொடர்ந்து பாதுகாப்பு வசதி செய்யப்பட்டுள்ளதா என்ற கேள்விக்கு அதைப் பற்றிச் சட்டமன்றத்தில் விவாதிப்பது உசிதமல்ல என்றும் திரு அண்ணாதுரை பதிலளித்தபோது அவருடைய கூர்மதியையும் உயர் பண்பையும் பாராட்டாமல் இருக்க முடியவில்லை.

ஸ்ரீமதி ச ர ஸ் வ தி பாண்டுரங்கத்தின் வாழைத் தோட்ட விஷயம் காங்கிரஸ் சார்புள்ள பத்திரிகைக்கும் தி. மு. க. ஏடுகளுக்கும் இடையில் ஏற்பட்டுள்ள பெரும் போராட்டமாகக் கொஞ்ச நாட்களுக்கு இருந்து வந்தது. இவ்விஷயம் மேல் சபையில் விவாதத்துக்கு வந்தபோது திரு அண்ணாதுரை நடுநிலை வகித்து. ''இது இரு ஆக்கிரமிப்பாளர்களைப் பற்றிய விவாதம்'' என்று அடிப்படை விஷயத்தைச் சொல்லி விவாதத்தை முடித்தார். இந்நிகழ்ச்சி, கட்சிக்கு அப்பால் நின்று. நாடி பார்த்து. நோயின் மூலகாரணத்தையறிந்து பரிகாரம் தேடுகிறவர் திரு அண்ணாதுரை என்ற உணர்ச்சியை உண்டாக்கியது.

சுதந்திரக் கட்சி அங்கத்தினர்களின் தலைவராக விளங்கும் டாக்டர் ஹாண்டே ஒரு யோசனையைக் குறிப்பிட்டார். 'மத்திய சர்க்கார் பட்ஜெட் விவாதத்தின்போது நிதி மந்திரி கடும் எதிர்ப்பைக் கண்டாலும் நாட்டின் நிலைமையை உணர்ந்து, வரிகளில் சில சலுகைகள் அளிக்கிறார். அம்முறையை இங்கும் கடைப்பிடிக்கலாம்' என்றார்.

இதுவரை, தமிழக சட்டமன்றங்களில் சமர்ப்பிக்கப்படும் பட்ஜெட் அறிக்கையை எவ்வித மாற்றமுமின்றி அப்படியே ஏற்றுக் கொள்வதுதான் சம்பிரதாயமாக இருந்து வந்திருக்கிறது. ஸ்ரீ ஹாண்டேயின் யோசனையை ஒப்புக் கொண்டு விவசாய வருமான வரியில் நாம் கொண்டு வந்த வரிமுறையைக் கைவிட்டு ஐந்து ஏக்கருக்கு மேலுள்ள நிலங்களுக்கு கம்பவுண்டு வரி முறையையே விவசாய மக்களின் உணர்ச்சிக்கு இணங்க ஏற்றுக் கொண்டிருக்கிறார் திரு அண்ணாதுரை. இவ்விஷயத்தில் முதலமைச்சரின் மனமாற்றத்துக்குக் காரணமாயிருந்தவர் சுதந்திரக் கட்சியின் ஆதரவுடன் நின்று, பழைய மந்திரி மஜீதை வெற்றி கொண்ட திரு ஏ. ஆர். சுப்பையா முதலியார் ஆவார். திரு சுப்பையா முதலியார் விவசாயப் பெருங்குடியில் தோன்றி இன்றும் விவசாயியாக இருப்பவர். அவர் கொடுத்த உருப்படியான யோசனையை அரசினர் மேற்கொண்டதைப் பாராட்ட வேண்டும்.

பட்ஜெட் விவாதத்துக்குப் பதிலளிக்கும் வகையில் திரு அண்ணாதுரை பேசியது மத்திய — ராஜ்ய சர்க்கார்களிடையில் உறவு முறைகள் பற்றிய ஓர் அற்புதமான விளக்கவுரையாகும். ஒவ்வொரு கருத்தையும் மிகத் தெளிவாக விண்டு வைத்தார்.

தமிழக அரசாங்கத்துக்கு முந்நூறு கோடி ரூபாய் கடன் இருக்கிறது. இதற்கு மத்திய சர்க்காருக்குக் கொடுக்க வேண்டிய பதினைந்து கோடி ரூபாய் வட்டியை இந்த ஆண்டிலன்றி அடுத்த ஆண்டுக் தருவதற்கு ஒப்புதல் கேட்டது தி. மு. க. அரசாங்கம். அதற்கு மத்திய சர்க்காரும் இணங்கக்கூடிய நிலையில் இருந்தது. ஆனால் அப்போது இஸ்ரேல் - அரபு சண்டை பற்றிய செய்தி வந்ததால் மத்திய நிதி மந்திரி ஒன்றும் செய்ய முடியாமல் போய் விட்டது. இதை விவரித்த முதலமைச்சர் தமிழக காங்கிரஸ்காரர்கள் — திரு பக்தவத்சலம் தவிர — தமது இந்தக் கோரிக்கையைக் கண்டித்தாலும் மத்திய நிதி மந்திரி தமது அரசாங்கத்திடம் அநுதாபம் கொண்டிருப்பதாகத் தெரிவித்தார்.

இதை யொட்டி மத்திய சர்க்காருக்குத் தமிழக சர்க்கார் எப்படி யெல்லாம் கடன் பட்டிருக்கிறது என்பதை விளக்கினார். இதில் ஒரு கடனைப் பற்றி அவர் கூறிய தகவல் மிக சுவாரசியமாக இருந்தது.

குந்தா மின்சாரத் திட்டத்துக்கு கனடா அரசாங்கம் இலவசமாக ஒருசில கோடி ரூபாய் பெறுமானமுள்ள யந்திரங்களை வழங்கியுள்ளது. ஆனால் அதற்கு மத்திய சர்க்கார் தமிழக அரசிடமிருந்து வட்டி வாங்குகிறது. இது என்ன நியாயம்?

இப்படிப் பலப் பல தகவல்களும் குட்டிக் கதைகளும் சொல்லி பட்ஜெட் மீதான உரையை முடித்தார். அத்துடன் ஜூலை 23ம் தேதியை எழுச்சி நாளாகக் கருதிச் செயல்படவேண்டியதன் அவசியத்தை வற்புறுத்தினார் முதல் மந்திரி. காங்கிரஸ் கட்சியினரையும் அதில் சேர்ந்து கொள்ளும்படி கோரினார். எனினும் சபையிலிருந்தவர்களிலும் சரி, பொதுஜனங்களிடையேயும் சரி, இவ்வளவு சீக்கிரத்தில் எழுச்சி நாள் கொண்டாட வேண்டியது அவசியந்தானா என்ற ஐயம் எழாமல் இல்லை!

— எஸ். வி. எஸ்.



மிகுந்த வலுவும்,
மிருதுவும் கொண்ட

# ட்ரயான்ஸ் ரேயான் நூல்

உங்களுக்கு
நிறைந்த லாபத்தை
தருகிறது.

ட்ரயான்ஸ் நூல் அதிகப்படியான வலுவும் சீரான தன்மையும் வாய்ந்தது நிச்சயம் பூச்சியரிப்புக்கு ஆளாகாதது. சாயம் தோய்ப்பது எளிது. நெய்வதும் எளிது ஆகவே, சிறப்பான வலுவும் நீண்டகால உழைப்பும் கொண்ட துணிவகைகளை நெய்து: அவற்றை விரைவில் விற்று நிறைந்த அளவு லாபம் சம்பாதிக்கலாம் நீங்கள்.

மயில் நீலம், பொன் மஞ்சள், சிகப்பு மற்றும் பச்சை ஆகிய கெட்டிச்சாய நிறங்களிலும் கிடைக்கிறது.

75, 100, 120, 150 மற்றும் 300 டினியர்களில் உள்ளவற்றிலிருந்து உங்களுக்குத் தேவையானதைத் தேர்ந்தெடுங்கள்.



சென்னை மற்றும் ஆந்திர ராஜ்யங்களில் பிரத்தியேக ஸ்டாக்கிஸ்ட்டுகள்:

**ரேயான் ட்ரேடர்ஸ் பிரைவேட் லிமிடெட்,**

51, செம்புதாஸ் தெரு, சென்னை-1 போன்: 21641—தந்தி: 'CELYARN'
கிளைகள்: த.பெ.தெ. 253, சேலம். த.பெ.தெ. 154, மதுரை.
த. பெ. தெ. 1372, கோயமுத்தூர்

rt-4076

# பஞ்சாமிர்தம்



ருஷ்யப் பிரதமர் கோஸிஜின் அமெரிக்காவுக்குச் சென்றிருந்த சமயத்தில், ஜனாதிபதி ஜான்ஸனின் மகளுக்கு ஆண் மகவு பிறந்திருக்கும் செய்தியைக் கேள்வியுற்றார். ஜான்ஸனைச் சந்தித்ததும், கோஸிஜின், ''நீங்கள் தாத்தாவானது பற்றி மகிழ்ச்சி. பேரனுக்கு என் பாராட்டுக்கள்....!'' என்று கூறிவிட்டுப் பதினெட்டு ஆண்டுகளுக்கு முன்னதாகவே தாம் தாத்தாவாகிவிட்டதாக அறிவித்தாராம்.

தாத்தாக்களில்கூடப் பதினெட்டு வயது தாத்தா என்று கணக்கு ஏற்படுமானால், திரு ஜான்ஸனை, ''பாப்பாத் தாத்தா !'' என்று அழைக்கலாமல்லவா?

ஃ ஃ ஃ

ஆஸ்திரேலிய நீச்சலழகி லிண்டா மக்கில் இங்லிஷ் கால்வாயை வேகமாக நீந்திக் காட்டுவதாக இருக்கிறார். இதற்குமுன் 1965ல் ஒரு முறை இந்தக் கால்வாயில் அவர் நீந்திய போது பதினொரு நிமிடம் தாமதமாகி விட்டதால் உலக சாதனையை ஏற்படுத்த முடியவில்லை. இதற்குக் காரணம், நீச்சல் உடையின் தோள்பட்டி அடிக்கடி கழன்று வந்ததோடு, பிடிப்பாக இருந்ததால் உடலை அறுக்கவும் செய்ததாம். இதனால் நீந்தும் வேகம் குறைந்து விட்டது என்று கூறும் இந்த நங்கை, இம்முறை ஆடை எதுவும் அணியாமலே நீந்தப் போவதாக அறிவித்திருக்கிறார். இதைக் கேட்டு யாராவது அதிர்ச்சியடையப் போகிறார்களே என்பது இவருடைய கவலை. ஆகவே, ''தண்ணீரில் இறங்கும் போதும், கரையேறி வரும் போதும் நிச்சயம் நீச்சல் உடை அணிந்திருப்பேன் !'' என்று கூறுகிறார் இந்த அழகி.

இங்கு சில திரைப்படச் சுவரொட்டிகளில் இடம் பெறும் நீச்சல் தோற்றக் காட்சிகளைக் காண நேரும்போது மனம் சகியாமல் தலை குனிந்து செல்லவேண்டியிருக்கிறது. சிலர் எதிரில் வரும் வண்டி வாகனங்கள் மீது முட்டிக் கொள்ளவும் இந்தச் சுவரொட்டிகள் ஒரு காரணமாகின்றன. இதைக் கூறி, நீச்சல் பந்தயம் நடக்கப் போகும் நாளில் எதற்கும் பிரிட்டிஷ் நண்பர்கள் சற்றுக் கவனமாக இருக்க வேண்டும் என்று மவுண்ட்ரோடு பாதசாரி எச்சரிக்கிறார்.

ஃ ஃ ஃ

''கேரளத்தில் காங்கிரஸ் தோல்வியுறும் என்று ஸ்ரீ எஸ். கே. பட்டீல் அபசகுனம் மாதிரிக் கூறியதால்தான் தேர்தலில் அங்கு காங்கிரஸ் தோற்றுவிட்டது'' என்று அ.இ.கா. க.வில் ஒருவர் கூறியதற்குப் பட்டீல், தாம் அவ்வாறு கூறவில்லை என்று மறுத்தார். இதை ஸ்ரீ பட்டீல் மறுத்ததற்குப் பதிலாக, ''வெற்றிபெறக் கூடிய இடங்கள் என்று நாம் கூறிய இடங்களில்தான் என்ன வாழ்ந்தது?'' என்று கேட்டிருக்கலாம்.

ஃ ஃ ஃ

நாய்கள் மட்டுமல்ல, காகங்களும் போலீஸ் வேலைகளுக்குப் பயன்படும் என்று சமீபத்தில் தெரிய வந்திருக்கிறது.

கேரளத்துக்குச் செல்லும் கோழி முட்டைகள் என்று சொல்லி ஒரு ரயில் நிலையத்தில் பார்ஸல் வான்களில் ஏற்றுவதற்காகக் கூடைகள் வைக்கப்பட்டிருந்தன. வண்டி ஏறக் காத்திருந்த இந்தக் கூடைகளின் மீது சில காகங்கள் அமர்ந்து கொத்திக் கொண்டிருந்த போது, சிதறிய அரிசிகளை ஒரு போலீஸ் அதிகாரி கவனித்தார். அவ்வளவுதான்; அனுமதியின்றிக் கேரளம் செல்லவிருந்த அரிசிக் கூடைகள் கைப்பற்றப் பட்டன. ஒவ்வொரு கூடையினுள்ளும் மேலாகச் சில கோழி முட்டைகள் காணப் பட்ட போதிலும் அவற்றுக்கு அடியில் அரிசி மறைந்திருந்தது.

குற்றங்களைக் கண்டுபிடித்துக் கொடுப்பவர்களுக்கு அந்த இடத்திலேயே போலீஸ் துறையினர் பரிசுகள் கொடுப்பதைக் காண்கிறோம். இதையொட்டி இந்தக் காகங்களுக்கும் பரிசு கொடுத்திருக்கலாம். குறைந்த பட்சம், சிறிது சாதமாவது கொண்டு வந்து போட்டிருக்கலாம். மனிதர்களே சாப்பாட்டுக்குப் பறக்க வேண்டியதாயிருக்கிறதே என்று காகங்களுக்கு ஒன்றும் கொடுக்காமல் இருந்து விட்டார்களோ ?

ஃ ஃ ஃ

டில்லிக்கு வரச் சொல்லி அழைக்கப்பட்ட என்னைப் பிரதமர் இந்திரா காந்தி பார்த்ததும், ''நீங்கள் இவ்வளவு அவசரப்பட்டு வந்து விட்டீர்களே!'' என்றார்.

—வங்க முதல்வர் முகர்ஜி

இதைச் சொல்லத்தான் ஒருவேளை தம்மைப் பிரதமர் அழைத்தாரோ என்று முகர்ஜி நினைத்திருந்தால் ஆச்சரியமில்லை.



# நெஞ்சம் நெகிழட்டும், பஞ்சம் பறக்கட்டும்!

'**பா**ரவன் காண், பாரதனிற் பயிராவான் காண், பயிர் வளர்க்கும் துளியவன் காண், துளியில் நின்ற நீரவன் காண், நீர் சடை மேல் நிகழ்வித்தான் காண்' என்று ஆண்டவனைப் பாடினார் அப்பர். நீர் சடை மேல் நிகழ்வித்த அவனே பாரில் பயிரைத் தராமல், பயிருக்கு நீரைத் தராமல் சோதிப்பதுமுண்டு. யாருக்குச் சோதனை? பஞ்சத்தில் அடிபட்டுப் பரிதவிக்கும் அந்த மக்களுக்கு அல்ல. பஞ்சத்துக்கு ஆளாகாமலிருக்கும் மற்ற மாந்தருக்குத்தான் சோதனை. தங்களது சோதரர்கள் உதரம் காய்ந்து, உதிரம் வற்றி வாடி வதங்கும் போது மனித குலம் அந்த வாதையில் எப்படிப் பங்கு கொள்கிறது, மனத்தாலும் தனத்தாலும் உழைப்பாலும் எப்படி உதவி புரிகிறது என்று காணவே ஒரு சோதனையாகப் பஞ்சத்தையும் பட்டினித் துயரையும் ஆண்டவன் அனுப்பி வைப்பான் போலும்.

பிஹாரில் இப்போது ஏற்பட்டுள்ள பஞ்சம் அம்மாநிலத்தின் சரித்திரமே இது வரை காணாத ஒரு பயங்கரம். பிஹாரின் சரித்திரம் வறட்சியைக் கண்டதுண்டுதான். எனினும் அதனினும் அதிகமாகக் கருணைப் புரட்சியைக் கண்ட மாநிலம் அது. கருணையின் உருவான சீதாதேவி வந்து தோன்றிய பகுதி அது. கருணைத் தத்துவத்தின் மூர்த்தியான புத்தர்பிரான் வசித்த நாடு அது. அவரது கருணை முழக்கத்தை எதிரொலித்த ஆயிரமாயிரம் புத்த விஹாரங்கள் சூழ்ந்து, அதனாலேயே விஹார் (பிஹார்) என்று பெயர் பெற்ற ராஜ்யம் அது. இன்று உலக மாந்தரின் கருணையைப் பரீட்சை பார்க்கவேதான் அங்கு பஞ்சமும் பரிதவிப்பும் தலைவிரித்தாடுகின்றனவோ?

பிஹாரின் மக்கட் தொகை ஐந்தேகால் கோடி. இவர்களில் நான்கு கோடிப் பேர் இப்போது பஞ்சத்தால் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். புனித புத்த கயாப் பகுதியும், பாலமோ, ஹஜாரிபாத் மாவட்டங்களும் பஞ்சத்தின் பயங்கர வீச்சுக்கு முற்றிலும் ஆளாகியுள்ளன. அடுத்

நம்முடைய மதப்பணி, ஆன்மீகப் பணி, ஆலயப் பணி எல்லாம் பிஹார் மக்களுக்கு உதவுவது தான். துன்பமுற்றவர்களுக்கு உடலாலோ, பொருளாலோ உதவுவதைவிட வேறு எப்படி இறைவனை வழிபட முடியும்?

★

பஞ்சத்தால் பாதிக்கப்பட்ட விவசாயி.

பிஹாரின் பஞ்சப் பிரதேசங்களில் இப்படி வெடிப்புற்ற காய்ந்த நிலங்கள் பயங்கரமாகக் காட்சியளிக்கின்றன.

தடுத்து இரண்டாண்டுகள் வான் மழை பொய்த்ததால் நேர்ந்த வினை இது. சாதாரணமாக ஆண்டொன்றுக்குச் சுமார் எழுபத்தைந்து லட்சம் டன் உணவு தானியம் விளைவிக்கும்போதே பிஹாருக்குப் பதின்மூன்று லட்சம் டன் தட்டுப்பாடு இருக்கும். இந்த ஆண்டில் அம்மாநிலத்தால் முப்பதே லட்சம் டன் தான் விளைச்சல் காண முடிந்தது என்பதை அறிந்தால் அங்கு பஞ்ச நிலை எவ்வளவு கடுமையாக இருக்குமென ஊகிக்கலாம்.



பட்டினியால் அல்லலுறும் பச்சிளம் குழந்தைகள்.

செப்டம்பர் முடிய மாதந்தோறும் நாலு லட்சம் டன் உணவு தானியங்கள் அனுப்பி வைக்கும்படி டில்லியை மாநில சர்க்கார் வற்புறுத்தி வருகிறது. ஆயினும், டில்லியால் ஒன்றரை லட்சம் டன்னுக்கு மேல் அனுப்ப இயலவில்லை. உபரி ராஜ்யங்களிடமிருந்து உரிய உதவி கிட்டவில்லை என்பது வெட்கக்கேடு. 'உணவு மண்டலம்' என்று ஏற்படுத்தித் தானியப் போக்குவரத்துக்குச் செய்துள்ள செயற்கைக் கட்டுப்பாடோ அதனினும் பெரும் வெட்கக்கேடு. 'உணவு மண்டலங்களை ஒழித்துத் தேசம் முழுவதையும் ஒரு மண்டலமாக்குங்கள். நாங்கள் ஒருவாறு சமாளித்துக் கொள்வோம்' என்று பிஹாரின் முதன்மந்திரி ஸ்ரீ மகாமாயா பிரசாத் சின்ஹா அவர்கள் முதன்மந்திரிகள் மாநாட்டில் கேட்டுக் கொண்டும் பயனில்லை.



மழைக்கு ஏங்கும் விவசாயி.

பஞ்சத்தினால் மாண்டவர்களின் எண்ணிக்கையைப் பற்றிப் பலதரப்பட்ட புள்ளி விவரங்கள் கூறப்படுகின்றன. மடிந்தவர்களின் எண்ணிக்கையைச் சரியாகக் கணக்குப் போடுவதால் பயனுமில்லை. உயிரைவிடாமல் நடைப்பிணமாக இருப்பவர்களை உடனுக்குடன் காக்க நம்மால் இயன்றதைச் செய்ய வேண்டுவதே இன்றையத் தேவை. உதவியை அனுப்ப நாம் காலதாமதம் செய்கிற ஒவ்வொரு விநாடியிலும் ஓர் உயிரின் ஊசலாட்டம் அதிகமாகிறது என்பதை உணர்ந்து, விரைவுபட வேண்டியதே இப்போது மக்கள் கடமை.

நாலு கோடி மக்களும், அறுபது லட்சம் கால்நடைகளும் எலும்பும் தோலுமாக அவலமுற்று நிற்கிறார்கள். இந்தக் கோரக் காட்சியைப் பிஹாரின் நகரப் பிரதேசம் ஓரளவு மறைத்துக் காட்டுகிறது. ஆனால் மக்களில் எண்பத்திரண்டு சதவிகிதத்தினர் வாழும் கிராமப்புறங்களுக்குச் சென்று விட்டால் நெஞ்சைப் பிளக்கும் பஞ்சக் காட்சிகள்தாம்.

உணவு, அல்லது உணவு தானியம் வழங்கப்படும் இடங்களிலெல்லாம் நீண்ட நீண்ட 'க்யூ'க்கள். தங்கள் வரைக்கும் உணவு கிடைக்குமோ, கிடைத்தாலும் எந்த அளவுக்கு அது வயிற்றை நிரப்புமோ என்று தவித்துக்கொண்டிருக்கும் மக்கள். உணவு ரேஷனுக்காகத் தரப்படும் சிவப்புக் கார்ட் கிடைக்காமல் அலமாப்புறும் துரதிர்ஷ்டசாலிகள் இன்னொருபுறம்.

ஆஸ்பத்திரிகளில் முன்னெப்போதும் இல்லாத கூட்டம். டாக்டர்களிடம் தங்கள் கோளாற்றைச் சொல்ல முடியாமலே மயக்கமடைந்து சாய்கிறவர்கள் எத்தனையோ பேர்! கோளாற்றை அவர்கள் சொல்வானேன்? கைப் புண்ணுக்குக் கண்ணாடியா? மூன்றுநாள், நாலு நாள், ஒருவாரம் என்று பட்டினி கிடந்தவர்கள் பலவிதப் பிணிகளுடன் வைத்திய சாலைகளை மொய்க்கின்றனர்.

சர்க்கார் உணவு வழங்குவதிலும், வைத்திய உதவி அளிப்பதிலும் எத்தனையோ குறைபாடுகள். ரேஷன் கார்ட் பெறுவதில் அர்த்தமற்ற சாங்கியங்கள். அதிகாரிகளின் கவனக் குறைவு — கருணைக் குறைவு வேறு. 'பணம் கொடுத்தால்தான் பார்ப்பேன் என்று டாக்டர் ஐயா சொல்கிறாரே, பணத்துக்கு எங்கே போவோம் ?' என்று பல 'ப்ளாக்' ஆஸ்பத்திரிகளில் ஏழைகள் பிரலாபிப்பதாகப் பத்திரிகைகளில் பார்க்கும் போது குன்றிப் போகிறோம். இத்தனையிலும் நம் பிச்சையெடுக்காத பிஹாரின் வஞ்சனையற்ற உத்தம உழவுப்

பெருமக்கள், 'மழையில்லை என்பது ஒருபுறமிருக்கட்டும்; ஆண்டவன் எப்படியும் மழையை அனுப்பிவிடுவான்; ஆனால் மழை வந்ததும் விதைக்க எங்களிடம் விதை இல்லையே! அதிகாரிகள் முறையாக விதை வழங்கமாட்டேன் என்கிறார்களே !' என்று கூறும்போது நாணுகிறோம்.

ஆயினும், சில செய்திகளின் தவற்றுக்காக அரசாங்கத்தைச் சகட்டு மேனியாகக் கண்டித்து விடுவதற்கில்லை. பீஹார் சர்க்கார் தன்னால் இயன்ற அனைத்தும் செய்து வருகிறது. உணவுப் பஞ்சத்தின் உயிர்நாடியான தண்ணீர்ப் பஞ்சத்தைத் தீர்ப்பதில் மனப்பூர்வமாக முனைந்துள்ளது அது. பூமியின் கர்ப்பம் வரையிலாவது துளைத்தெடுத்து நீரைக் கொண்டு வருவதற்குத் திட்டங்கள் போடப்படுகின்றன.

பீஹார் முதன் மந்திரி தமது மக்களிடம் நம்பிக்கை வைத்திருக்கிறார். அந்த நம்பிக்கையை மக்களும் பூர்த்தி செய்து வருகிறார்கள். இதனால்தான் அந்நிய நாட்டுப் பத்திரிகைகள், 'கொடிய பஞ்சத்திலும் பீஹார் மக்களின் நன்னடத்தை நலியவில்லை. இது போன்ற சமயங்களில் நிகழக் கூடிய கொலை, கொள்ளைகளும், அராஜகங்களும் அங்கு காணப்படவில்லை' என்று பாராட்டுகின்றன.

மக்களை நம்புவதோடு ஆண்டவனையும் நம்புகிறார் முதல்வர். 'மழையைக் கொண்டு வர நாம் என்ன செய்ய முடியும்? ஆண்டவனிடமும், அவனது அருளிடமும் நம்பிக்கை கொண்ட அனைவரும் பிரார்த்தனை செலுத்துங்கள். அவன் கருணை புரிவான்' என்கிறார்.

அவரோடு சேர்ந்து நாமும் நம்பினாலன்றி பீஹாரின் வறட்சியைக் கண்டு உற்சாகத்தை இழக்க வேண்டியதுதான். கண்டக் நதி ஓடிய படுகை இன்று பாலையாகிவிட்டது. டால்டன்கஞ்சுக்கும் ராஞ்சிக்கும் இடையே நூறு சதுர மைலில் அமைக்கப்பட்ட வன விலங்குகளின் சரணாலயத்தில் இன்று புலிகள் நா வறண்டு கர்ஜிக்கின்றன; யானைகள் இனமாகப் பிளிறுகின்றன; மானும் மாடும் சோகமாகக் குரல் கொடுக்கின்றன — நீர் வேண்டித்தான்! அவற்றுக்காகப் பெரிய தொட்டிகள் கட்டி, எப்பாடோ பட்டுக் குழாய்கள் மூலம் நீர் கொண்டு வருகிறார்கள். எல்லாம் யானைப் பசிக்குச் சோளப் பொரியே ஆகிறது! உணவு தானியம் இல்லாவிடில் வைக்கோல் மட்டும் ஏது? அறுபது லட்சம் ஆவினங்கள் அலைகின்றன. கால்நடை விடுதிகள் அமைத்து, முடிந்தமட்டில் பராமரித்து வருகின்றனர்.

மக்கள் — மாக்கள் அனைவரது பஞ்ச நிவாரணத்துக்காகவும் பல ஸ்தாபனங்கள் அற்புதமான முறையில் உதவிப் பணி புரிந்து வருகின்றன. செஞ்சிலுவைச் சங்கம், 'கேர்' ஸ்தாபனம் முதலியன ஒப்பற்ற முறையில் சேவை செய்து இலவசமாக உணவும் உடையும் அளித்து வருகின்றன. ஸ்ரீ ஜயப் பிரகாச நாராயணர் அவர்களின் தலைமையில் இயங்கும் பீஹார் பஞ்ச நிவாரணக் குழுவின் சீரிய சேவையை எவ்வளவு பாராட்டினாலும் தகும். ஆயினும் ஸ்ரீ ஜயப்பிரகாசர் அவர்களோ, பீஹாரின் உணவுப் பஞ்சத்தைவிட மற்றப் பகுதிகளிலுள்ள மக்களுடைய நெஞ்சத்தின் பஞ்சத்தைக் கண்டு அதிகம் வருந்துகிறார். 'நம் நாட்டில் கோடி கோடியாக வருமானமுள்ள எத்தனையோ மடங்களும், தேவாலயங்களும் இருக்கின்றனவே, அவை ஏன் வாரி வழங்க முன்வரவில்லை?' என்று துக்கிக்கிறார். இன்று நம்முடைய மதப் பணி, ஆன்மிகப் பணி, ஆலயப் பணி எல்லாம் இந்த மக்களுக்கு உதவுவதுதான். நம் போல் உயிரும் உடலும் உணர்வும் கொண்டவர்களுக்கு வாழ்வளிக்க நம்மால் இயன்றதைச் செய்வோம். செய்வதையும் இன்றே இப்பொழுதே செய்ய முந்துவோம்.

நாம் செய்யக்கூடிய காரியங்கள் பல உண்டு :

செல்வச் செழிப்புள்ளவர்கள் தம்முடைய அதிகப்படித் தேவைகளைக் குறைத்துக் கொண்டு அதைப் பீஹார் மக்களுக்கென ஒதுக்கலாம்.

இப்போது பீஹாருக்கு உணவுவகைகள், உடை, போர்வை, மருந்து (முக்கியமாக வைட்டமின் மாத்திரைகள்), கால்நடைத் தீவனம், பணம் யாவும் தேவைப்படுகின்றன. கிணறு, குளம் வெட்டுவதில் சிரமதானமும் செய்யலாம். நம்மில் பலர் ஒன்று சேர்ந்து எவ்வகை உதவிப் பணி செய்வது என்பதையும், எந்தப் பகுதியில் செய்வது என்பதையும் திட்டமிட்டு, பீஹார் பஞ்ச நிவாரணக் குழுவின் ஆலோசனையுடன் இதனைச் செய்யலாம்.

வசதியுள்ளவர்கள், அவதியுறும் குடும்பங்களை 'ஸ்வீகாரம்' செய்து கொள்வது போல் தம் பொறுப்பாக்கிக் கொண்டு, குறிப்பிட்ட காலம் வரையில் ரட்சித்து வரலாம்.

நாமே வழங்குவதோடு மட்டுமின்றிப் பிறரிடமிருந்து உதவி நிதியும், புதிய அல்லது பழைய ஆடையும் (முக்கியமாகக் குழந்தைகளின் உடுப்புக்கள்) சேகரித்து அனுப்பலாம்.

சென்னையில் பீஹார் பஞ்ச நிவாரணத்துக்காக ஒரு குழு அமைக்கப்பட்டு அரிய பணிகள் செய்து வருவதை இங்கு குறிப்பிட வேண்டும். இக்குழுவினர் கோவை, மதுரை, திருச்சி முதலிய இடங்களுக்கும் சென்று நிதி திரட்டி வரலாம் என்று முதலமைச்சர் கூறியுள்ள யோசனை வரவேற்கத்தக்கது. இது வரை இக்குழு எழுபத்தையாயிரம் ரூபாய் உதவி நிதி எழுப்பியுள்ளது. இன்னமும் நாம் வாரி வழங்க வேண்டும். அதை இதயம் நிறைந்து செய்வோமாயின், இந்த அட்மிஷன் சீஸனில் ஆண்டவன் நமக்கு வைத்துள்ள கருணைப் பரீட்சையில் தேறி அவனது அருட்சாலையில் இடம் பெறுவோம்.

நம் மனம் நெகிழ்ந்தால் வானமும் நெகிழும்; வான்மழை பொழியும்; வாடும் பீஹாரும் வளமுற்று வனப்புற்று வாழும் !

---

* பீஹார் பஞ்ச நிவாரணக் குழுவின் விலாசம், Bihar Relief Committee, Sadaquat Ashram Patna-10.




'பாரிஸ்' — அழகு கொழிக்கும் அந்த அற்புத நகர் — அழிவின் விளிம்பிலிருந்து தன்னைக் காத்துக் கொண்ட அந்த அதிசய நிகழ்ச்சியை விவரிக்கும் திரைப்படம்தான் 'பாரிஸ் நகரம் எரிகிறதா?' இப்படி, ஆவலோடு தவிப்போடு கேட்டவன் அடால்ப் ஹிட்லர். ஆக்ரமித்துக் கொண்ட அழகுநகரை, நேசப் படைகளின் கையில் விடக் கூடாது. அப்படி விட நேர்ந்தால் அங்கு அவர்கள் பாழடைந்த பாரிஸ் நகரையே காணவேண்டும் என்பது அரக்க மனம் கொண்ட அந்த மூர்க்கனின் முடிவு. இதை நிறைவேற்றும் பொறுப்பை 'நகரங்களை அழிப்பவன்' என்ற சிறப்புப் பெயர் பெற்ற 'வான்கோல்டிட்ஸ்' என்ற தளபதியிடம் ஒப்படைக்கிறான்.

நாஜிகளின் கொடுங்கோலாட்சியினால் பிரெஞ்சு மக்களின் ரத்தம் கொதிக்கிறது. எல்லைக்கு வெளியே நேசப் படைகள் காத்திருக்கின்றன. நகரிலே புரட்சி உருவாகிறது. அதிசயத்திலும் அதிசயம் — பாரிஸ் நகரின் அதிர்ஷ்டம் — நாஜி தளபதியின் மனத்திலும் மாற்றம் ஏற்படுகிறது. இத்தகைய ஒரு சுந்தர நகரைச் சூனியமாக்க உத்தர விட்ட ஹிட்லர் ஒரு பைத்தியக்காரன் என்ற எண்ணம் தோன்றுகிறது, வான் கோல்டிட்ஸின் உள்ளத்திலே! பாரிஸ் பிழைக்கிறது.

இப்படி ஓர் அற்புதம் நிகழும் என்று எதிர்பார்த்து அந்நாட்டு மக்கள் பேசா திருக்கவில்லை. தங்கள் தலைநகரைக் காக்க அவர்கள் புரியும் தியாகம், சாகஸம், அப்பப்பா! அதை 'ஆஹா, அபாரம்!' என்று சொல்வதற்கு மேல் வார்த்தைகளில்லையே!

அன்றைய பாரிஸ் நகரை, மக்களின் உணர்ச்சிக் கொந்தளிப்பை, ஆவேசத்தை அப்படியே மறுபடியும் உருவாக்கிக் காட்டியிருக்கிறார்கள் பாரமௌண்ட் படத் தயாரிப்பாளர்கள். வண்ணப் படமல்ல; வரலாற்று உண்மைப் படம். காதலில்லை, கட்டுக் கதையுமில்லை. எனினும் இரண்டரை மணி நேரம் நம்மை மறந்த நிலையில் உட்கார்த்தி வைக்கும் அதிசயமான படம் இது. இரண்டாவது உலகப் போரிலே பத்திரிகைச் செய்தியாளர்களாகப் பணியாற்றிய அமெரிக்க பிரெஞ்சு எழுத்தாளர்களான இருவரின் உழைப்பிலே உருவான நடந்த கதை இது.

பல பிரபல நட்சத்திரங்கள் இந்தப் படத்திலே நடிக்கிறார்கள். ஆனால் பாரிஸ் நகர மக்கள் கூட்டத்திலே வரும் ஒவ்வொருவருமே நம் மனத்தில் தங்குகிறார்கள்.

பலவித உணர்ச்சிகள் நம் உள்ளத்தில் அலைமோதுகின்றன, படத்தைப் பார்க்கும்போது. எனினும் படம் முடியும் சமயத்தில் அமெரிக்கப் படைகளைக் கண்டதும் அதுவரை வெடிச்சோடிக் கிடந்த பாரிஸ் நகர வீதிகளில் எப்படி பிரெஞ்சு மக்கள் உள்ளத்தின் கனம் குறைந்து இலேசாகிவிடக் குதூகலிக்கிறார்களோ அப்படி ஒரு நிறைவு நமக்கும் ஏற்படுகிறது.





# அன்னியனுக்கும் அருளிய ஸ்ரீ அம்பிகை



1. பவானி சங்கமேசுவரர் ஆலயம்.
2. நடராஜர், சிவகாமி.
3. அமிர்தலிங்கம்.
4. ஸ்ரீ நரசிம்மர்.



பவானியில் புராதன சங்கமேசுவரர் ஆலயத்துக்குப் பதினாறு லட்சம் ரூபாய் திரட்டி, கோயில் திருப்பணிகள் முடிவுறப்பெற்று 1967 ஜூலை 14-ந் தேதி மகா கும்பாபிஷேகம் நடைபெறுகிறது. இந்தத் தருணத்தில் 'பவானி சங்கமேசுவர'ரைப் பற்றித் திரு பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள் 12-3-'61 கல்கி இதழில் எழுதியுள்ளதை மறுபடியும் வெளியிடுகிறோம். - ஆசிரியர்

கங்கையும் யமுனையும் கலக்கும் 'அந்தப் பிரயாகையில் சென்று முழுகினால் எவ்வளவோ புண்ணியம் உண்டு. அத்தனை தொலைதூரம் செல்வானேன்? நம் தமிழ் நாட்டிலேயே ஒரு பிரயாகை இருக்கிறதே, தட்சிணப் பிரயாகை என்ற பெயரோடு. காவிரியும் பவானியும் கலக்கும் அந்தப் பவானி முக்கூடலில், அந்தச் சங்கமத்தில் சென்று மூழ்கி எழுந்தால் எவ்வளவு புண்ணியம்? கங்கையும் யமுனையும் கலக்கும் இடத்திலே சரஸ்வதி நதி அந்தர்வாகினியாகக் கலப்பது போலவே, இங்கே காவிரியும் பவானியும் கூடுதுறையிலே அமுத நதியும் அந்தர்வாகினியாகக் கலந்து இதனையும் ஒரு நல்ல திரிவேணி சங்கமம் ஆக்கிவிடுகிறது.



வேணுகோபாலர்

அங்குதானே காவிரியின் மேல் கரையில் சங்கமேசுவரர் கோயில் இருக்கிறது?

ஃ ஃ ஃ

கோயிலுக்கு இரண்டு வாயில்கள். வடக்கு நோக்கிய பிரதான வாயில் வழியாகவே நாம் உள்ளே செல்லலாம். அவ்வாயிலைக் கடந்ததுமே முன் முற்றத்தில் சிறிய கோபுரத்துடன் கூடிய ஒரு தனிக் கோயிலில் விநாயகர் இருப்பார். அவரை வணங்கிவிட்டு மேல் நடக்கலாம். கிழக்கு வாயிலுக்கு எதிரிலேதான் கொடிமரம், பலிபீடம் விளக்கேற்றும் கல் தூண் எல்லாம் இருக்கும். கோயிலுள் போவதன் முன் கிழக்கு வாயில் வழியாகக் கூடுதுறைக்குச் சென்று அங்கு மூழ்கி முழுகி நம் பாவங்களைக் கழுவிக் கொள்ளலாமே. அங்கெல்லாம் வசதியாக ஸ்நானம் செய்ய நல்ல படித்துறை கட்டி வைத்திருக்கிறார்கள். அதிலும் அமாவாசை கிரகண காலங்களில் அங்கு நீராடுவது சிறப்பு என்றும் தெரிகிறது.

காவிரி அரவம் இரு கடரைப்
பற்றும் காலத்திலே,
மேலுலகம் பெறுவோர் புனல்
மூழ்க விரும்புவது
கோலம் மிகுந்த பவானியும்
பொன்னியும் கூடுதுறை
வாலிய காசி நண்ணாவூர்
பயில் கொங்கு மண்டலமே

என்பதுதானே கொங்கு மண்டல சதகப் பாட்டு?

'இதைக் கேட்டவுடனே, இது என்ன இதை நண்ணாவூர் என்று வர்ணிக்கிறார்கள் என்று கேட்கத் தோன்றும். ஆம்! பார்வதியம்மையின் திருப் பெயர்கள் பலவற்றுள் பவானி என்பது ஒன்று. அந்தப் பெயரே நதியின் பெயராகவும், தலத்தின் பெயராகவும் அமைந்திருக்கிறது. மேலும் இத்தலத்துக்கு வந்து இங்குள்ள முக்கூடலில் முழுகி எழுவோரை யாதொரு தீங்கும் நண்ணாது. ஆதலின் இதனை நண்ணாவூர் என்றும் அழைத்திருக்கின்றனர். இந்த நண்ணாவூரே, திரு நணா என்றும் குறுகி, ஞானசம்பந்தரால் 'வந்தார் மடமந்தி கூத்தாட வார்பொழிலில் வண்டு பாடச் செந்தேன் தெளி ஒளிரத் தேமாங் கனி உதிர்க்கும் திரு நணா' என்றும் பாடல் பெற்றிருக்கிறது. இன்னும் இந்தத் திரு நணா என்னும் பவானி, சங்ககிரி, நாககிரி (திருச்செங்கோடு) மங்கலகிரி, வேதகிரி, பத்மகிரி என்று

கூடுதுறை-காவேரி, பவானி, அமுத நதி கலக்குமிடம்.

போட்டோக்கள் : ராமகிருஷ்ணா





அம்மன் செப்புச் சிலை

### உழுதுண்டு வாழ்வாரே...



ட்ரூமன் ஜனாதிபதி ஆனதும் அவரது தாயாரைச் சந்தித்து ஒரு பிரமுகர் பாராட்டினார்: "நீங்கள் உங்கள் மகனைக் குறித்துப் பெருமைப்படலாம்" என்றார்.

"உண்மைதான். அதே அளவுக்கு அதோ வயலில் உழுது கொண்டிருக்கும் எனது இரண்டாவது மகனைக் குறித்தும் பெருமைப் படுகிறேன்" என்றார் ட்ருமனின் தாய்.

(காரனெட்) - 'ருத்ரு'

ஐந்து சிறு மலைகளுக்கு இடையே இருப்பதால் பஞ்சகிரி மத்தியப் பிரதேசம் எனவும் வழங்குகிறது.

இந்தப் பவானி கூடுதுறையிலே காயத்ரி தீர்த்தம் என்று ஒரு தீர்த்த கட்டம் இருக்கிறது. அதனைக் காயத்ரி மடு என்றும் கூறுகிறார்கள். இதன் கரையிலே காயத்ரி லிங்கமும் இருக்கிறது. அமுதலிங்கம் என்று ஒரு லிங்கத் திருவுருவம் வேறு இருக்கிறது. அன்று தேவர்களும் அசுரர்களும் சேர்ந்து பாற்கடலைக் கடைந்து அமுதம் எடுத்திருக்கிறார்கள். அதில் ஒரு சிறு பங்கைப் பராசர முனிவர் மகாவிஷ்ணுவிடம் பெற்றிருக்கிறார். இந்தப் பராசரர் கொண்டு வந்த அமுதத்தைத் தட்டிப் பறிக்க அசுரர்கள் அவரைத் தொடர்ந்திருக்கிறார்கள். அமுதம் அவர்களின் கண்ணில் படாமலிருக்க அதனைப் பராசரர் இந்தக் கூடுதுறையிலே புதைத்து வைத்திருக்கிறார். அப்படிப் புதைக்கப்பட்ட பாண்டத்தோடு கூடிய அமுதமே அங்கு லிங்க உருவாக மாறியிருக்கிறது. இந்த அமுதலிங்கத்தின் அடியில் இருந்துதான் அமுதவூற்று புறப்பட்டுக் காவிரியோடு கலக்கிறது என்கிறார்கள். இந்த அமுதலிங்கம் அதற்குரிய ஆவுடையாரின் பேரில் இருக்கிறது. எளிதாக எடுக்கவும், திரும்ப வைக்கவும்கூடிய நிலையில் இருக்கிறது. மகப்பேறு இல்லாதவர்கள் இந்த அமுதலிங்கத்தை எடுத்து இடையில் வைத்துக் கொண்டு அக்கோயிலை வலம் வந்தால் மகப்பேறு அடைவர் என்பது நம்பிக்கை.

கூடுதுறையில் இத்தனையும் பார்த்தபின் இனி கோயிலுள் நுழையலாம். இந்தக் கோயிலைச் சுற்றி ஒரு கோட்டை இருந்திருக்கிறது அந்த நாளில். அந்தக் கோட்டைச் சுவரின் சின்னங்கள் ஆங்காங்கே காணப்படுகின்றன. பெரும் பகுதி இடிந்து தகர்ந்து விட்டது என்று தெரிகிறது. கோயில் பிராகாரத்தைச் சுற்றினால், அங்கு தல விருட்சமான இலந்தை மரத்தைப் பார்க்கலாம். அது காரணமாக இத்தலம் பதரி ஆசிரமம் என வழங்கப்பட்டிருக்கிறது என்றும் அறியலாம். கோயிலின் நிருத்த மண்டபம், மகா மண்டபம் எல்லாம் கடந்தே கருவறையில் உள்ள சங்கமேசுவரரைத் தரிசிக்க வேணும். கோயிலுக்கு வடபுறம் அம்மன் கோயில் இருக்கிறது. அம்மையின் பெயர் வேத நாயகி. அங்கும் நிருத்த மண்டபம், மகா மண்டபம் எல்லாம் இருக்கின்றன. இந்த நிருத்த மண்டபத்தைக் கட்டியவர் மும்முடிக் கட்டி முதலியின் சகோதரி சின்னம்மாள் என்று அங்குள்ள கல்வெட்டு ஒன்று கூறுகிறது. அந்தக் கல்வெட்டில் அம்மையின் பெயர் பண்ணார்மொழியாள் என்று குறிக்கப்பட்டிருக்கிறது. இந்த அம்மன் கோயிலுக்கும் சுவாமி கோயிலுக்கும் இடையே தான் சுப்பிரமணியருக்கு ஒரு சிறு கோயில் இருக்கிறது. அம்மையை வணங்கியபின் ஆறுமுகனையும் சென்று வணங்கி வெளிவரலாம்.

பின்னர் வெளி முற்றத்துக்கு வந்தால், இன்னுமொரு பெரிய கோயில் இருப்பதைப் பார்ப்போம். அதுஎன்ன கோயில் என்று விசாரித்தால் அதுதான் ஆதிகேசவப் பெருமாள் கோயில் என்பார்கள். இது சிறப்புத்தானே. சைவ வைஷ்ணவ வேற்றுமைகளைக் களைந்தெறியவே, பெரியதோர் ஈசுவரன் கோயிலிலேயே பெருமானுக்கு இடம் கொடுத்திருக்கிறார்கள். ஆம்! அன்று தில்லைச் சிற்றம்பலவன் கோயிலிலே திருச்சித்ர கூடத்துப் பெருமானையும் தரிசித்து வணங்கியிருக்கிறோமே. இக்கோயிலில் ரங்கமண்டபம் விஸ்தாரமான மண்டபம். ஆதிகேசவப் பெருமானது துணைவி சௌந்தரவல்லிக்கு ஒரு தனிக் கோயில். ரங்க மண்டபத்தின் வடபக்கத்திலே தனித் தனிக் கோயிலில் ருக்மிணி சத்யபாமை சகிதமாக வேணுகோபாலன் வேறு இருக்கிறார். திருமால் சந்நிதிக்கும் தாயார் சந்நிதிக்கும் இடையில் நம்மாழ்வார், ராமானுஜர் எல்லாம். இன்னும் கோயில் கல் தூண்களில் பட்டாபிராமர், கோதண்டராமர், திருப்பணி செய்த பக்தர்களின் சிலைகள்.

இவர்களை யெல்லாம் தரிசித்தபின் வெளியே வருவோம் என்றால் உடன் வருபவர்கள் கிழக்கு மதில் சுவர்ப்பக்கம் நம்மை அழைத்துச் செல்வார்கள். அம்மதில் சுவரில் அம்மன் சந்நிதிக்கு நேர் எதிரில் உள்ள மூன்று சிறு துவாரங்களைக் காட்டுவார்கள். அந்தத் துவாரங்கள் எப்படி ஏற்பட்டன என்பதற்கு ஒரு ரசமான கதையையும் கூறுவார்கள். கும்பினியார் இந்தியாவை ஆண்டபொழுது இந்தப் பவானிதான் சேலம், கோயமுத்தூர் மாவட்டங்களுக்குத் தலைநகராக இருந்திருக்கிறது. 1802 ம் வருஷத்தில் இங்கு கலெக்டராக இருந்தவர் வில்லியம் காரோ என்னும் துரைமகனார். அவர் பத்துப் பன்னிரண்டு வருஷங்கள் இங்கு இருந்திருக்கிறார். அவர், இப்போது பிரயாணிகள் விடுதியாக இருக்கும் பங்களாவிலே தங்கி வாழ்ந்திருக்கிறார். தினசரி இந்தச் சங்கமேசுவரர் கோயிலுக்கு ஆயிரக்கணக்கான மக்கள் வருவதையும் கூடுதுறையில் குளிப்பதையும் கண்டிருக்

# உங்களுக்கே... பருவ மங்கையின் பைந்தளிர் மேனியெழில்.

இளமை கொஞ்சிப் புதுமெருகு மிளிரும் எழிலுக்கே... ஜேய் அழகு சோப்! சரும நெகிழ்ச்சிக்கான எண்ணெய்கள் கொழித்திட, ஆழ ஊடுருவிச் சுத்தமிடும் அதன் மென்மை நுரை உங்கள் சருமத்திற்கு நேயமானது. விலை உள்ளளவும் எல்லை மீறிய செழிப்புடன் கமழும் அதன் மல்லிகை மணம் உங்களைக் கொள்ளைகொள்ளும். மறவாதீர்கள், நவீனமான உலோக ஜிகினாத் தாளுறை தரித்தது ஜேய் ஒன்றுதான்.

ஜேய்-நீங்கள் நினைப்பதை விடக் குறைவான விலை உள்ள அதி விசேஷ அழகுசாதன சோப்!

உங்கள் எழில் பெருக

## ஜேய்

அழகு சோப்

உங்கள் மனங்கவர் மணங்கமழ்வது.




**டாடா**
**தயாரிப்பு**

235A.TM.

கிறார். அதோடு வருபவர்கள் வேதநாயகியின் அருளைப் பற்றி அடிக்கடி பேசுவதையும் கேட்டிருக்கிறார். அவருக்கு ஓர் ஆசை இந்த வேதநாயகியைத் தரிசிக்க வேண்டும் என்று. இவரோ பிற மதத்தினர். கோயிலுள் வர அனுமதிக்கப்படமாட்டார். இவரது ஆவலை அறிந்த அந்தத் தாலுகா தாசில்தார் அம்பிகையின் சந்நிதிக்குநேரே மதிலில் மூன்று சிறு துவாரங்கள் செய்து அவை வழியாக அலங்கரிக்கப்பட்ட அம்பிகையைக் கலெக்டர் காண வகை செய்திருக்கிறார். அம்பிகையின் வடிவழகைக் கண்டு வழிபாடு செய்திருக்கிறார் கலெக்டர். இப்படியே தினசரி சிறு துளை வழியாக அம்மையைக் கண்டு தரிசித்து வந்திருக்கிறார் காரோ துரை. ஒரு நாள் இரவு தம் பங்களாவில் உறங்கிக் கொண்டிருந்த போது வேதநாயகியைப் போல் அலங்காரம் செய்து கொண்ட பெண் ஒருத்தி தம்மை வெளியே போகும்படி சொன்னதாகக் கனவு கண்டிருக்கிறார். அப்படியே படுக்கையை விட்டு எழுந்து வெளியேயும் வந்திருக்கிறார். என்ன அதிசயம், இவர் வெளி வந்த சில நிமிஷங்களில், பங்களாக் கூரையே இடிந்து விழுந்திருக்கிறது. அன்னையின் அருளை வியந்து வாழ்த்திய கலெக்டர், தந்தத்தாலேயே ஒரு கட்டில் செய்து அதனை அம்பிகைக்குத் தம் காணிக்கையாக வழங்கியிருக்கிறார். கட்டிலில் தம் பெயரையும் பொறித்து வைத்திருக்கிறார். இக்கட்டில் காணிக்கையாகக் கொடுக்கப்பட்ட தேதி 11—1—1804 என்று கட்டிலில் இருந்து தெரிகிறது. தென்னாடுடைய சிவன் எந்நாட்டவர்க்கும் இறைவன் என்றார் மாணிக்கவாசகர். அப்பாலும் அடிசார்ந்த திருக்கூட்டமும் அடியார் கூட்டத்துடன், சேர்ந்தவர்களே. இந்த முறைப்படி, பிற மதத்தினரையும் தம் அடியவர்களாகச் சேர்த்துக் கொள்ளும் சங்கமேசுவரர் — வேதநாயகியின் பெருமைதான் என்னே? பத்தொன்பதாம் நூற்றாண்டில் நடந்த இந்தச் சம்பவத்தை முன்னரே அறிவிப்பார் போல் ஆயிரத்து இருநூறு வருஷங்களுக்கு முன்பே ஞானசம்பந்தர் பாடியிருக்கிறார் :

வில்லால் வரையாக, மாநாகம்
நாணாக, வேடம் கொண்டு
புல்லார் புரம்மூன்றும் எரித்தார்க்கு
இடம்போலும், புலியும்மானும்
அல்லாத சாதிகளும் அங்கு அழல்
மேல் கைகூப்ப அடியார்கூடி
செல்லா அரு நெறிக்கே செல்ல
அருள் புரியும் திருநணாவே.

என்பது அவரது தேவாரம். 'அல்லாத சாதிகள்' ஜாபிதாவில் காரோ துரையும் சேர்ந்தவர்தானே. இங்குள்ள சங்கமேசுவரர்—வேதநாயகி தாம் பாடல் பெற்றார்கள் என்று இல்லை. இங்குள்ள முருகனும் அருணகிரியாரால் பாடப்பெற்றவர்.

மலைமேவு மாயக் குறமாதின்
மனமேவு வாலக் குமரேசா!
சிலை வேட சேவல் கொடியோனே
திருவாணி கூடற் பெருமானே!

பவானியே வாணி என்று குறுகி நிற்கிறது. இதற்குச் சங்ககால இலக்கியத்திலேயே ஆதாரம் இருக்கிறது.

* * *

[இந்தப் பவானி சங்கமேசுவரர் ஆலயத் திருப்பணிகளுக்குப் பதினொன்றரை ஆண்டுகளுக்கு மேல் இரவு பகலாகப் பாடுபட்டுப் பதினாறு லட்சம் ரூபாய்கள் திரட்டி, திருப்பணிகள் சிறப்பாக நடத்தித் தந்தவர் திரு கே. கே. கப்பண்ணக் கவுண்டர். கூகலூரில் காந்தி உயர்நிலைப் பள்ளியை நிறுவியவர். கோபியிலே ஹரிஜன ஹாஸ்டலை ஏற்படுத்தியிருக்கிறார். தீவிர காந்தி பக்தர். 'காந்தி கப்பண்ணா' என்றேதான் அன்புடன் ஊரார் அவரை அழைப்பார்கள். அரசியல் துறையை விட ஆத்மீகத் துறையில் நாட்டம் கொண்ட திரு கே. கே. கப்பண்ணக் கவுண்டரின் இடையறாத சேவையினால் பவானி சங்கமேசுவரர் திருப்பணிகள் பூர்த்தியுற்று, மகா கும்பாபிஷேகமும் ஜூலை 14ந் தேதி விமரிசையாக நடைபெறுகிறது. —ஆசிரியர்]

## பன்றிக்குப் பாராட்டு



சமீபகால ஆராய்ச்சிகளின்படி, அறிவுள்ள பத்துப் பிராணிகளுள் பன்றியும் ஒன்று என்று முடிவு செய்திருக்கிறார்கள். நாய், பூனை, சிம்பான்சி, குரங்கு இவைகளைப் போலவே பன்றியும் புத்தி கூர்மையுடையதுதானாம். தங்கள் சாப்பாட்டைச் சரியாகக் கவனித்துக்கொள்ளும் ஒரே பிராணி பன்றிதான். அவை அளவுக்கு மீறித் தின்று, அஜீரணத்தை வரவழைத்துக் கொள்வது கிடையாது. பன்றி மற்றெல்லா மிருகங்களையும்விட மிகச் சுத்தமாகத் தன்னை வைத்துக் கொள்ளுகிறது. சேற்றிலே இது புரண்டு கிடக்கிறதே என்று சிரிப்போருக்கு விளக்கம் தருகிறது ஒரு மாஸ்கோ பத்திரிகை. பன்றியின் தோலில் வியர்வையை வெளியிடும் துவாரங்கள் கிடையாது. அதன் ரோமமோ உஷ்ணம், பூச்சிகளிலிருந்து பாதுகாப்பளிக்கும் வகையில் இல்லை. குட்டையானவை. அதனால்தான் இந்தச் சேற்றுக் குழப்படி. பெருவெள்ளம் வரும்போது பன்றிகள் மரங்களில் ஏறிக்கொள்ளும். வெள்ள நீர் வடியும்வரை மரங்களின்மீது காத்திருக்கும். பிக்கினித் தீவில் அணுகுண்டு வெடிக்கப்பட்டபோது அங்கு அதே நிலையில் உயிரோடிருந்த ஒரே ஜந்து பன்றிதான் என்றால் அதன் பெருமையைச் சொல்லவா வேண்டும்?
















# காலேஜ் ஹாஸ்யம்!









பிரின்ஸிபாலைக் காணவில்லை! கண்டுபிடித்துக் கொடுப்பவருக்கு அட்மிஷன் தரப்படும்.

காரியதரிசி



# குழலூதும் சுரேஷ்

தியாகராஜ சுவாமிகளின் இருநூறாவது ஆண்டு விழாவை யொட்டித் தி. நகர் ஆர்ட்ஸ் அகாடெமியார் நடத்திய கலை நிகழ்ச்சியில் பெங்களூர் இளைஞர் பி. எஸ். சுரேஷின் புல்லாங்குழல் கச்சேரியைக் கேட்டவர்கள் இளம் வித்துவான்கள் வரிசையில் ஒரு புது நட்சத்திரம் தோன்றியிருக்கிறது என்று மகிழ்ந்தார்கள். சுரேஷின் இரண்டு மணி நேரக் குழலிசை, நாத இனிமையும், ஸ்வர லய வேலைப்பாடுகளும் அமையப்பெற்று உயர்தரமாக இருந்தது. கல்லூரி மாணவராக இருந்தும் குழல் இசையை மிகச் சிறந்த முறையில் அப்யசித்து மிகுந்த தன்னம்பிக்கையுடன் முழுக் கச்சேரி செய்யும் லாகவத்தை அடைந்திருப்பது போற்றத் தக்கது. எடுத்த எடுப்பிலேயே ராகங்களின் ஜீவ ஸ்வரங்களை ரக்தியுடன் ஆலாபனை செய்வதும், பெரிய கீர்த்தனைகளையும் அநாயாசமாக வாசிப்பதும், கல்பனை ஸ்வரங்களை மூன்று காலங்களிலும் இடம் தவறாது வாசிப்பதும் அவருடைய கச்சேரியில் சிறப்பு அம்சங்களாக விளங்கின. வித்துவான் மாலியின் சாயையும் முத்திரையும் அதிகமாகத் தோன்றினாலும், தமக்கென்று ஒரு தனி வழியை ஏற்படுத்திக் கொள்ளக்கூடிய அம்சங்கள் அவருடைய வாசிப்பில் தென்படுகின்றன. இளைஞர் என்பதால் லயகார சங்கீதத்தில் அதிக மோகம் இருப்பதை நாம் பொருட்படுத்த வேண்டியதில்லை. பாவ அம்சத்துக்கு அதிக முக்கியத்துவம் அளித்துக் கச்சேரிகளைச் செய்து வந்தால், சுரேஷின் குழலிசை வேகமாக முன்னேறும்.

---

**நாயக் ............................. ( வங்காளி )**



"கரும்பு தின்னக் கூலியா?"

இப்படிக் கேட்பவர்கள் ஸ்ரீ சத்யஜித் ரேயின் 'நாயக்' என்னும் வங்க மொழிப் படத்தைப் பார்த்தால் கரும்பு தின்னக்கூலி வேண்டியது தான் என்பதை ஒப்புக் கொள்ளுவார்கள்.

காரணம், கரும்புதான் என்றாலும் சாற்றைக் காட்டிலும் சக்கைதான் படத்தில் அதிகம்.

இது ஒரு 'செட்'டில் எடுத்த படம். கதாநாயகன் ஓரிடத்திலிருந்து இன்னொரிடத்துக்கு ரயில் பிரயாணம் செய்து முடிக்கும்பொழுது கதை முடிந்து விடுகிறது.

ஒரு 'செட்' நாடகங்களும் திரைப் படங்களும் ஆரம்பத்தில் புதுமையாகத்தான் தோன்றின. நாடக உத்தி வளர்ந்திருப்பதாகவும் மகிழத் தோன்றியது. ஆனால் இம்மாதிரி நாடகங்களிலோ திரைப் படங்களிலோ உள்ள ஒரு சிரமம், பங்கு பற்றும் நடிகர்கள் வசனத்திலேயே கதையை நடத்திச் செல்ல வேண்டியவர்களாக இருப்பதுதான். இதனால் பல சந்தர்ப்பங்களில் கதையும் விரியாமல் விறுவிறுப்பும் குன்றி விடும். என்னதான் கைதேர்ந்த டைரக்டராக இருந்தாலும் ஸ்ரீ சத்யஜித் ரேயின் 'நாயக்' படம் இந்தக் குறையிலிருந்து தப்ப முடியவில்லை. உத்தம் குமார், ஷர்மிளா டாகுர் - இவர்களைக் காட்டிலும் அவர்களோடு நடிக்கும் ரயில் நன்றாக நடிக்கிறது. இப்படத்தில் வாழ்க்கையைப் பின்னோக்கிப் பார்க்கும் ஒரு சில காட்சிகள் நன்றாக இருக்கின்றன. ஒளிப் பதிவும், ஒலிப்பதிவும் பின்னணி இசையும் பல இடங்களில் பிரமாதம்! அவற்றைக் கரும்பென ரசிக்க வேண்டுமென்றால் போராகக் குவிந்திருக்கும் சக்கையின் நடுவில் அமர்ந்தாக வேண்டுமே!

## பாலாடை

இந்த சீஸனில் குழந்தைப் பிரச்னையை வைத்து எடுக்கப்படும் படங்கள் ஈசல் போல் புறப்பட்டுள்ளன — குழந்தையும் தெய்வமும், பெற்றால்தான் பிள்ளையா? பேசும் தெய்வம்... இத்தியாதி. குழந்தை ஆசை, இருதார மணம் — இவற்றை அடிப்படையாகக் கொண்டது, பாலாடை. ஜானகி — சேகர் தம்பதிகளுக்குக் குழந்தையில்லாக் குறை பெரும் குறை. குழந்தைச் செல்வம் பெற இளையாளாகத் தன் சகோதரி சாந்தியையே பொரிக செய்கிறாள் மூத்தாள் ஜானகி. ஆனால் ஜானகிக்கே தாய்மைப் பேறு கிட்டுகிறது! (எந்த லேடி டாக்டர் அவளுக்குத் தாய்மைப்பேறு கிடையாது என்றாளோ, அவளே குழந்தை உண்டாகியிருக்கும் நற்செய்தியைச் சொல்கிறாள்! ஒரு லேடி டாக்டருக்கு இந்த அசட்டுப் பட்டம் தேவை தானா?) இரண்டு பெண்டாட்டிக்காரன் பாடு திண்டாட்டம் தானே? மூத்தாள் மாடிப் படியில் உருண்டு, ஒரு குழந்தைச் செல்வத்தைத் தந்து, மண்டையைப் போட்டு விடுகிறாள்; அவர்களுக்குள்ள பிரச்னையும் தீருகிறது!

சிவாஜி கணேசன் சேகராக வந்து இரண்டு பெண்டாட்டிக்காரனுக்குள்ள அவஸ்தையை அநுபவிக்கிறார்! குழந்தையில்லாக் குறையைப் பிரதிபலிக்கும் போது அவரிடம் உணர்ச்சிப் போராட்டங்களையல்லவா காண்கிறோம். துக்கத்தையும், மகிழ்ச்சியையும் நன்கு பிரதிபலிக்கும் பாத்திரம். பத்மினியும்—கே. ஆர். விஜயாவும் அவருக்கு இரட்டை மனைவியராக வந்து நடிகர் திலகத்தைப் பாடாய்ப் படுத்துகிறார்கள்.

நந்தவனம், நிலா, தூண், மரம் — இவை பாட்டுக்கு அறிகுறியென்றால் பிறந்த நாள் கொண்டாட்டம் அவலட்சண நடனங்களுக்கு அறிகுறி என்று சினிமா அகராதியில் சேர்த்து விடலாம்.

டைரக்டர் பீம்சிங் என்றால் விபத்துக்களுக்குப் பஞ்சமிராது என்ற நம்பிக்கை இந்தப் படத்தில் பொய்க்கவில்லை.

ஹாஸ்யப் பகுதியை நாகேஷும் மனோரமாவும், வி. கே. ராமசாமியும், முத்துலட்சுமியும் கவனித்துக் கொள்கிறார்கள். இங்கேயும் இரண்டு பெண்டாட்டிகளிடம் நாகேஷ் தவிக்கிறார்; பரிதாபம்! ஜோசியக்காரி மனோரமா பாத்திரம் தத்ரூபமாயிருக்கிறது.

பாலாடை கதையில் புதுமை யில்லை; நடிப்பில் களையிருக்கிறது.



மூன்றாவது பரிசு நாவல்

# மணக் கோலம்

## அத்தியாயம் 14

சீதா பயத்துடன் சேஷனைப் பார்த்தாள். ஒரு வேளை சந்தானம் தனக்கு இஷ்டமில்லாததை இவனிடம் சொல்லியிருக்கிறாரோ!

"சந்தானம் எல்லாவற்றையும் உங்ககிட்டே சொல்லியிருக்கிறார் போல் இருக்கு!" என்றாள் அவள். வெறுப்புச் சிரிப்பு அவளிடமிருந்து இழைந்து வந்தது.

"அவர் சொல்லவில்லை. மிஸ்டர் ரகுபதிதான் சொல்லியிருக்கிறார்."

"அப்படியா?" என்ற சீதா, "உங்களுக்கு அவரைத் தெரியுமா?" என்று கேட்டாள்.

"தெரியுமாவது! அவருடைய கல்யாணம் எங்க ஊரிலேதானே நடந்தது" என்றான் சேஷன்.

அவள் திடுக்கிட்டுப் போவாள் என்று எதிர்பார்த்து ஏமாந்த அவன் விழித்தான். பிறகு, "எனக்கு ரகுபதியைத் தெரியாதுன்னுதான் சந்தானத்திடம் பொய் சொல்லியிருக்கிறேன்!" என்றான்.

"உங்க ஊரிலேதானா?" என்று கேட்ட சீதா மெதுவாக எழுந்திருக்க முற்பட்டாள்.

"நான் கொஞ்சம் வெகுளி..... மனசில் இருக்கிறதை அப்படியே



சொல்லி விடுவேன். உங்க குடும்பத்தைப் பற்றி எனக்கு எல்லாம் தெரியும். கொஞ்ச நாளுக்கு முன்னாடி வரைகூட ஒவ்வொருத்தரைப் பற்றியும் சந்தானம் வாயாரச் சொல்லியிருக்கிறார். இந்த மாதிரி அக்காளையும் தங்கையையும் பெற்றெடுத்திருக்கிற தாயார் புண்ணியவதின்னுகூட நான் நெனைச்சிருக்கேன். அதனாலே இப்போ நான் ஒரு கேள்வி கேட்டால் நீங்க தப்பா நெனைக்க மாட்டீர்களே?''




''இத்தனை பீடிகை எதற்கு? நீங்கள் என்ன வேண்டுமானாலும் கேளுங்கள். எதுவுமே என்னைப் பாதிக்காத அளவுக்கு நான் என் மனசைப் பக்குவப்படுத்திக் கொண்டாகி விட்டது.''

''இந்த வரனை உங்களுக்குப் பிடிச்சிருக்கா?''

சீதா சிரித்தாள். அதில் ஒளிந்திருக்கும் வெறுப்பைச் சேஷன் புரிந்து கொண்ட போது, அவனுடைய இதயம் வேதனைப்பட்டது.

''பிடிச்சிருக்கா, இல்லியா என்கிற கேள்விகளுக்கெல்லாம் இடமே இல்லை இனி மேல்..... என் அம்மா என்னை எடுத்து வளர்த்து ஆளாக்கியிருக்கா.... அவன் 'மனையிலே உட்காரு'ன்னு சொன்னால், உட்காருவேன்! அவ்வளவு தான்......!''

''இதுக்குத்தான் தியாகம்னு பேரு!''

''நீங்க என்ன பெயரைக் கொடுத்தால் எனக்கு என்ன? ஒவ்வொருத்தருக்கும் ஓர் அலாதியான வாழ்க்கையை விதி வகுக்கிறது. அதிலிருந்து யார் நழுவிப் போய்விட முடியும்? சரி, நான் வருகிறேன். மணி இரண்டரை ஆகப் போகிறது. இன்னமே போன் செய்தாலும் பிரயோசனம் இருக்காது. வீட்டுக்கு வருவார். பேசிக் கொள்ளுகிறேன்......''

சீதா மெதுவாக எழுந்து, குடையை எடுத்துக் கொண்டாள். அவளுடைய ஒல்லியான உடம்பும், சோர்ந்த முகமும், எண்ணெய்ப் பசையில்லாத கேசமும், சேஷனின் உள்ளத்தை அள்ளின. 'பாவம் சீதா!'

அவள் இரண்டு அடி சென்றதும் திரும்பினாள். ''நான் போனவுடன் திரும்பி வந்தால், கேட்டிருந்த பணத்தைப்பாங்கியிலிருந்து எடுத்துக்கொண்டு வரச் சொல்லுங்கள். அவருக்கு எவ்வளவு என்று தெரியும்!''

''சரி, சொல்லுகிறேன்!''

''நான் போய் வருகிறேன்!''

''சரி....!''

சீதா சென்ற பிறகு சேஷன் வெகு நேரம் அவளுக்காகத் தன்னுள் அழுது கொண்டிருந்தான். அட்டெண்டர் வந்துவிட்டு மீண்டும் வெளியேறியதோ, அமிர்தம் வந்து தன் சீட்டில் உட்கார்ந்து கொண்டிருப்பதோ அவனுக்குத் தெரியாது!

அவனுடைய மனத்தில் ஒரு திடமான சங்கல்பம் எழுந்தது. ஓர் அயோக்கியனிடம் அயோக்கியத்தனமாகப் பணம் பறிப்பது வேறு. ஓர் ஏழைப் பெண்ணின் கண்ணீரைத் துடைப்பது வேறு. பணத்தால் கிடைக்கிற லாபத்தைக் காட்டிலும், மற்றது யோக்கியமானது. ஆத்ம திருப்தியைத் தனக்கும் அளித்து, மற்றவர்களுக்கும் சந்தோஷத்தை அளிக்கக் கூடியது.

இப்போது, சீதாவின் கல்யாணத்தில் தனக்கும் ஓர் அலாதிப் பொறுப்பு, கடமையெல்லாம் தோன்றி விட்டன என்பதைச் சேஷன் உணர்ந்தான். ஆனால் தன்னுடைய திட்டத்தைப் பற்றி சந்தானத்திடம் மூச்சுவிடக் கூடாது என்று தீர்மானித்துக் கொண்டான்.

சரியாக ஐந்து மணிக்குத்தான் சந்தானம் திரும்பி வந்தான். அன்றைய தபால்களைப் படிக்காத அவன், மலை போல் மேஜை மேல் குவிந்து கிடக்கும் பைல்களையும் காகிதங்களையும் பார்த்தான்.

'இன்றைக்கு ஒன்றும் என்னால் செய்ய முடியாது' என்று முணுமுணுத்த அவன், பூனைபோல் நடந்து வரும் சேஷனுடைய உருவத்தைப் பார்த்ததும், ''என்ன சேஷன், இன்னிக்கும் யாராவது வந்தார்களா?'' என்று கேட்டான்.

''ஆமாம், சார்! சீதா வந்திருந்தான்!''

''யாரு? சீதாவா?'' அவனுடைய முகத்தில் ஆச்சரியம் பிரதிபலித்தது.

''ஆமாம் சார். முதலாளி வீட்டுக்குப் போன் பண்ணியாவது பேசலாமான்னு கேட்டான்.....ஆனா இங்கே இருந்தவரைக்கும் பேசல்லே!''

''என்ன சொன்னான்....?''

முதலில் தயங்கிய சேஷன் எல்லா விவரங்களையும் கூறினான். நீண்ட நேரம் சந்தானம் மௌனம் சாதிக்கவே சேஷனால் மேற்கொண்டு ஏதும் பேச முடியவில்லை.

''உம்..., ஆல்ரைட்.... விதி பெரிசுதான்.....!'' என்று முணுமுணுத்தான் சந்தானம்.

''யாருடைய விதி சார்? சீதாவின் விதியா? ஏன் சார்?''

அவனுக்குப் பதில் அளிக்காமல், ''ஒன்றுமில்லே'' என்று மழுப்பினான் சந்தானம்.

''ஏன் சார், அன்னிக்கு ரகுபதியைப் பற்றிச் சில தகவல்கள் தெரிய வேண்டும்னு சொன்னீர்களே...? அது இந்தக் கலியாண விஷயமாகத்தானே?'' கேட்கும்போதே தனக்குத் தெரிந்திருக்கும் எல்லா உண்மைகளையும் உடைத்து விடலாமா என்ற ஆசைகூட சேஷன் உள்ளத்தில் எழுந்தது.

''ஆமாம். ஆனா இனிமேல் தேவையில்லே.....''

''ஏன் சார்.... கலியாணம் நிச்சயமாகிவிட்டதென்று?''

''சேஷன்.... தயை செய்து என்னைத் தொந்தரவு செய்யாதே! அன்னிக்கு ஏதோ கேட்டேன். அதோடு விடு..... யார் யாரைக் கலியாணம் பண்ணிக் கொண்டால் எனக்கு என்ன? நாதியற்றவர்கள் சொல்கிற வார்த்தைக்கும் செய்யற காரியத்துக்கும் மதிப்பே கிடையாது.''

அவனுடைய சலிப்பை நன்றாகப் புரிந்து கொண்ட சேஷன் நிதானமாக, ''நீங்கள் கவலைப்படாதீர்கள் சார். கலியாண நாள் நிச்சயிக்காத வரையில் எதையும் தீர்மானமா எடுத்துக்கொள்ள முடியாது'' என்று கூறிப் புன்னகை பூத்தவனாய், பதிலுக்குக் காத்துக் கொண்டிருந்தான்.

''எனக்குத் தெரியாது!'' என்றவன் தொடர்ந்து, ''ஆனால் இவ்வளவு தூரம் எல்லாம் ஆன பிறகு தேதி நிச்சயம் பண்றது என்ன பெரிய காரியமா?'' என்று கேட்டான் சந்தானம்.

''சார், தயை செய்து எனக்கு ஓர் உதவி செய்வீர்களா?'' என்று ஏதோ ஒரு புது விஷயத்துக்குத் தாவுவதுபோல் பேச்சைத் திருப்பினான் சேஷன்.

''என்ன?''

''என்னிக்குக் கல்யாணம், எங்கே கலியாணம்னு தெரிஞ்சவுடன் எனக்குச் சொல்ல வேண்டும். ஏன்னா எனக்குப் பத்திரிகை வராது.....''

'எனக்கே வருமோ என்னவோ?' என்று தன்னுள் முணுமுணுத்துக் கொண்ட சந்தானம், ''பார்க்கலாம்!'' என்றான்.

''அது போதும் சார்!''

சேஷன் வெளியேறிய ஐந்து நிமிடங்களுக்கெல்லாம் போன் மணி அலறியது.

''சந்தானம், ஹியர்....!'' என்று ஆரம்பித்த அவன், ''யார் ஜானுவா? வந்து கொண்டே யிருக்கியா? சரி, வா! காத்துண்டிருக்கேன்.... ஆமாம், நான் பார்க்க வில்லே. மத்தியானம் வந்து கொஞ்ச நேரம் இருந்து விட்டு, இரண்டரை மணிக்குப் போனானாம். இன்னும் வீட்டுக்கு வரவில்லையா? ஒரு வேளை ஆபீஸுக்குப் போயிருக்கிறானோ என்னவோ.... எதுக்கும் நீ உடனே வா. எனக்குப் பசிக்கிறது. டாக்ஸியிலே வர்றியா? ஆல் ரைட்'' என்று முடித்து விட்டுப் போனை வைத்தான். நிம்மதி இல்லாமல் அவன் மனம் குமைந்தது.

ஜானுவின் வருகை ஆச்சரியத்தையும், ஏன் ஒருவித சஞ்சலத்தையும் உண்டாக்கியது. கடந்த இரண்டு மூன்று நாட்களாக அவன் பாகீரதி அம்மாளைக் கண்ணால்கூடப் பார்க்கவில்லை என்று சொல்லலாம். ஆனால் அடிக்கடி அவமேலு அம்மாளைப் பார்த்து விட்டான்! ஏன் பாகீரதி அவனை இப்படித் தப்பாக நினைத்துக் கொண்டு வதைக்க வேண்டும்? அவன் ஒரு குற்றமும் இழைக்க வில்லையே?

சீதாவுக்கு இந்தக் கலியாணத்தில் உள்ளூற விருப்பமில்லை என்பது அவனுக்குத் தெரிந்ததுதான். ஆனாலும் சீதா தன்னைக் காவு கொடுக்கத் தீர்மானித்த

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!

ஏனெனில் ஒரே தேய்ப்பில் கால்கேட் கிரீம், துர்நாற்றத்தையும், சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை ஒழித்துவிடுகிறது.

கால்கேட், 10ல் 7 சந்தர்ப்பங்களில் உடனடியாக வாய் துர்நாற்றத்தை அகற்றுகிறது என்பதையும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பெருமளவில் ஏராளமானவர்களுக்குச் சொத்தை தடுக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான ஆராய்ச்சிகள் நிரூபித்துள்ளன. இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

கால்கேட்டின் நீடித்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்!

நீங்கள் பற்பொடியை விரும்பினால் இந்தப் பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.




DC. G. 35 TAM




**பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்மையான பற்களைப் பெறவும் வழக்கமாக கால்கேட்டினால் பல்துலக்குங்கள்**

...உலகிலேயே பெரும்பாலானவர்கள் மற்றெல்லாப் பற்பசைகளையும் விட, கால்கேட் டென்டல் கிரீமையே வாங்குகிறார்கள்.

3



## மந்திரிகள் உலகம்

"எதற்காக யோசித்து யோசித்து மண்டையை உடைத்துக் கொள்ள வேண்டும்? சோஷலிஸம் என்றால் சமத்துவம் என்று அர்த்தம். பணக்காரர்களை ஏழைகளாக்குவதுதானே சுலபம்; ஏழைகளைப் பணக்காரர்களாக்குவதை விட?.... அதாவது நம்மைப் போன்ற ஒரு சில்லரைத் தவிர....!"

---

பின் அவனால் ஒன்றும் செய்ய முடியவில்லை. தியாகம் சிறந்ததுதான். தெய்வீகமும்கூட. ஆனால் அதற்காகப் பைத்தியக்காரத்தனமாக, வாழ்க்கையை நாசப்படுத்திக் கொள்ளுவது விவேகமா? ரகுபதி தெளிந்த அயோக்கியன்; குடிகாரன். மனைவியை இழந்த பிறகு என்னென்னவோ விளையாட்டுக்களெல்லாம் விளையாடியவன்! இதையெல்லாம் விவரமாகச் சொல்லிப் பாகீரதியின் மனத்தைத் திருப்பலாம் என்றால் அதற்குச் சந்தர்ப்பமே இல்லாதபடி இந்த அலமேலு செய்து விட்டாள். அன்று முதல் முதலாக, ரகுபதியைப் பார்த்தபின் பாகீரதியிடம் தனக்கு இஷ்டமில்லாததற்குக் காரணத்தையும் அவன் விளக்கிச் சொல்லியிருக்க வேண்டும். அந்தச் செய்யாதது எவ்வளவு பெரிய ஆபத்தாக முடிந்து விட்டது! இனிமேல் அவன் என்னதான் ரகுபதியைப் பற்றி, அவனுடைய உண்மையான வாழ்க்கையை எடுத்துச் சொன்னாலும் பாகீரதி நம்பப் போகிறதில்லை. மேலும், இவ்வளவெல்லாம் சொன்ன பிறகு கலியாணம் நடப்பதையும் அவனால் சகித்துக்கொள்ள முடியாது. பத்து வருஷங்களாகப் பழகி விட்ட ஒரு குடும்பம், ஒருத்தியின் அறியாமையினாலும் மதியீனத்தாலும் என்றென்றும் துக்கப்படவே கூடாது.

ஆனாலும் அவனால் ஒன்றும் செய்ய முடியாது. பாகீரதியின் போக்கிலிருந்து அவனுக்கும் அக்குடும்பத்துக்கும் வீட்டு வியவகாரங்களைப் பொறுத்த வரையில் எந்தவிதமான சம்பந்தமும் கிடையாது என்பது தெரிந்து விட்டது.

இவ்வளவெல்லாம் இருந்தும்கூட, சீதா, ஜானு, கமலா தங்கள் இயல்பிலேதான் அவனுடன் பழகுகிறார்கள்! ஏன் சீதா கலியாணத்துக்குப் பண உதவி கூடக் கேட்டிருக்கிறாள்! அதை நினைத்த போது, ஒரு பக்கத்தில் சிரிப்புக்கூட வந்தது. எந்தக் கலியாணத்தை அவன் ஆதியிலிருந்து விரும்பவில்லையோ, அந்தக் கலியாணத்தை நடத்தி வைக்க அவனுடைய பணமே தேவைப்படுகிறது!

இது ஓர் அசம்பாவிதமா?

அவன் தன் சிந்தனையிலேயே மூழ்கிக் கொண்டிருக்கையில் திடீரென்று சிரிப்பொலி கேட்டது.

''என்ன ஃபான் காத்திலே கனகுஷியா தூக்கம் வர்றதா?'' என்று கேட்டுக் கொண்டே வந்தாள் ஜானு.

என்னதான் சிரிப்பும் மகிழ்ச்சியும் அவளிடமிருந்து ஒளிக் கதிர்கள்போல் வீசினாலும், ஏதோ முக்கியமான விஷயத்தைச் சொல்லத்தான் வந்திருக்கிறாள் என்று சந்தானம் ஊகித்தான்.

அலமேலு அம்மாளின் வேஷத்தைக் கலைத்து விட்டுத்தான் வேறு வேலை பார்க்கிறது என்று துணிந்த ஜானு சனிக்கிழமை அன்று காலையில், சந்தானத்துடன் சேர்ந்து காப்பி சாப்பிட்டபின் அலமேலு அம்மாள் எதிர்பாராத விதமாக வர்து நின்ற போது அவளிடம் என்னென்ன கேட்க வேண்டும் எப்படியெப்படிக் கேட்க வேண்டும் என்பதையெல்லாம் தயார் செய்து கொண்டாள். பாகீரதியும் வந்திருந்தவளும் சமையலறையிலேயே இருந்ததால், அவர்கள் கூடத்துக்கு வரட்டும் என்று ஜானு காத்திருந்தாள். கமலா என்ன நடக்கப் போகிறது என்று ஆர்வமாகத் தன் காதுகளைத் தீட்டிக்

கொண்டு நிற்க, சீதா தன்க்கே உரித்தான சாந்தத்துடனும் பொறுமையுடனும் தங்கையிடம் கெஞ்சிக் கொண்டிருந்தாள்.

''ஜானு, நேத்து ராத்திரிதான் நாம ஒருத்தருமே சாப்பிடவில்லே. அம்மாவும் ஏதோ துக்கத்திலோ கோபத்திலோ தரக் குறைவாகச் சந்தானத்திடம் பேசி விட்டாள். இப்போ மறுபடியும் நீ ஆரம்பித்தால் என்னென்ன விபரீதங்கள் உண்டாகுமோ என்று எனக்குப் பயமாயிருக்கு....'' என்றாள்.

''அக்கா! உனக்கு ஒன்றும் தெரியாது. முகம் மலரப் பார்க்கிறவர்களையெல்லாம் நம்பறவள் அம்மா! இந்த அம்மா அலமேலு மாமியைத் தெய்வம் மாதிரிக் கொண்டாடிக் கொண்டாடி அவள் அவ மனசிலே பதிந்து விட்டாள். அது போதாததற்கு உன்னையும் ஒரு மாதிரி வசப்படுத்தி விட்டாள்.''

''அதுக்கு இனிமேல் என்ன செய்ய முடியும்?''

''சித்ரா பொய் சொல்லுகிற பெண் இல்லேன்னு எனக்கு நிச்சயமாத் தெரியும். அதுவுமல்லாமல் அவள் ஏன் அநாவசியமா இந்த மாமியைப் பத்தி அவதூறாகப் பேசணும்? நன்னா யோசித்துப் பார். இவ புருஷன் வீடு வாசலிலே தரகு நடக்கிறது மாதிரி, இவள் வரன்களிலே நடத்தறு —''

''நடத்தி விட்டுப் போகட்டும்... உனக்கு என்ன நஷ்டம் அதிலே?''

''ஐயோ, அக்கா! உனக்கு உலகமே புரியாதா? நம்ம வீட்டிலும் அவள் தன் வியாபாரத்தைத்தான் நடத்துகிறான்னு நான் சொல்றேன்!''

''அம்மாகிட்டே பிரதி உபகாரமா இது வரையிலே காலணாகூடக் கேட்கல்லே, இது உனக்குத் தெரியுமா?''

''இனிமே கேட்க மாட்டாள்னு என்ன நிச்சயம்?''

''கேட்டால், இல்லேன்னு நானே அடிக்கச் சொல்றேன். போதுமா?''

''அக்கா! நான் உன்னைவிட நாலு வயசு சின்னவள் என்கிறதை மறந்துட்டேன்னு நினைக்காதே. நானேக்கு மணையிலே உட்காரணும்னு இருக்கிறப்போ அதுவும் வெளியூரிலே கலியாணம் நடக்கிறது என்கிற நிலையிலே இவ திமிர்னு நூறைக் கொண்டா, இருநூறைக் கொண்டான்னு பிடிவாதம் பிடிச்சா அப்போ என்னசெய்வே நீ? தரமாட்டேன்னு சொல்ல முடியுமா?''

''ஜானு. உன் கற்பனை கொஞ்சம் அதிகமாகவே ஓடறது. அலமேலு மாமி அப்படி யெல்லாம் வழிப்பறி செய்யற கூட்டமில்லே....!''

ஜானுவுக்கு ஆத்திரம்தான் வந்தது.

''அக்கா! டாக்ஸிக்காரன் ஸ்டிரைக் பண்ணினால், ரிக்ஷாக்காரன் நாலணுக் கூலியை எட்டணுவா பறிக்கிறான். பொங்கல் நவராத்திரியின் போது, வேண்டுமென்றே ஒன்றுக்கு இரண்டா பூவிலும் வெற்றிலையிலும் கொள்ளையடிக்கிறார்கள். படிப்பும் நாகரிகமும் இல்லாத ஏழை மக்களே இப்படிப் பேராசையுடன் அலையும் போது, நீ எப்படி இப்போதே இந்த மாமிக்குச் சர்டிபிகேட் கொடுக்க முடியும்?''

அவள் பேசி முடிக்கவும், அலமேலு அம்மாள் அங்கே பாகீரதி பின் தொடர வரவும் சரியாக இருந்தது.

''யாருக்கு யார் ஜானு சர்டிபிகேட் கொடுக்கிறார்கள்?'' என்று அலமேலு கேட்டுவிட்டுச் சிரித்தாள்.

''அக்கா உங்களுக்குக் கொடுக்கிறாள். நீங்கள் ரொம்ப நல்லவளாம். உபகாரியாம்.....!'' ஜானுவின் ஸ்தாயி மாறியது. பின்னால் இருந்துகொண்டே பற்களைக் கடித்தும் கண்ணைக் காட்டியும், சமிக்ஞையால் தன்னை அடக்கும் அம்மாவை லட்சியம் செய்யாமல் ஜானு சொல்லி விட்டுச் சிரித்தாள்.

''அவள் சீதா.... சீதான்னு பேரு அவளுக்குத்தான் பொருத்தம்.'' ஜானு வேறு விதம் என்று அலமேலு, சொல்லாமல் சுட்டிக்காட்டினாள்.

''ராமாயணத்திலே சீதாவும் ஜானகியும் ஒண்ணுதான் மாமி!''

இப்போது கமலா சிரித்தாள்.

''பேரு ஒண்ணு இருந்தால் போதுமா? அதது கத்துக் கொள்கிறதிலேயும் இருக்கோ இல்லியோ? சரிம்மா.... நான் வரேன். சீதா! இன்னும்கொஞ்ச நாள் பொறு. ஜமாய்த்து விடுவோம் உன் கலியாணத்தை!''

அலமேலு மெதுவாக நகர்ந்தாள்.

கமலா, ''அக்கா, மாமிக்குக் குங்குமம் கொடேன்!'' என்றாள்.

ஜானு, ''கொஞ்சம் இரு அக்கா!'' என்று சொல்லி விட்டு, ''மாமி! நான் ஒரு சேதி கேட்டேன். அது பொய்யா உண்மையான்னு உங்களுக்குத்தான் தெரியும்!'' என்று நிறுத்தினாள்.

''எல்லாம் அப்புறம் கேட்டுக் கொள்ளலாம். இப்போ ஏன் தொந்தரவு செய்யறே. மாமியை?'' என்று பாகீரதி கடிந்து கொண்டாள். தன் அறையில் இருந்தபடி கூடத்தில் நடப்பதைக் கேட்டுக் கொண்டிருக்கும் சந்தானம் அப்போது அவளுடைய மனத்துக்கு வேம்பாக இருந்தான். (தொடரும்)




### அத்தியாயம் 26

## அதிசய ஆயுதம்

**வ**ண்டி விஜயவாடா ஜங்ஷனில் நின்றுவிட்டுக் கிளம்பியபோது வண்டியில் கூட்டமே இல்லை. ரங்கமணியின் பெட்டியில் அவனையும் மில்லரையும் தவிர நாலைந்து பேர்கள் மட்டுமே இருந்தார்கள். அவர்களும் அந்தப் பெட்டியின் மறு பகுதிகளில் இருந்ததால் மில்லரும் ரங்கமணியும் வசதியாகக் கால்களை நீட்டி உட்கார்ந்து கொண்டார்கள். இடை இடையே மில்லர், ஒன்றிரண்டு தமிழ் வார்த்தைகளை வேடிக்கையாக உச்சரித்துவிட்டுச் சிரித்துக் கொண்டிருந்தார்.

மறு நாள் காலையில், வார்தா ஜங்ஷனில் வண்டி வந்து நின்றதும் ரங்கமணி, சன்னல் வழியாக எட்டிப் பார்த்தான். பிளாட்பாரத்தில் காந்திக் குல்லாக்காரர்களின் கூட்டம்தான் நிறைந்திருந்தது. ரங்கமணி அவர்களைக் கண்டதும் வெறுப்புடன் முகத்தைச் சுளித்துக் கொண்டான். வார்தா என்ற சொல்லிலேயே கசப்பை உணரும் அவனுக்கு வார்தா அளித்த குல்லாவைக் காணப் பொறுமை ஏது?

வண்டி புறப்பட்ட போது மில்லர் சொன்னார்: "இந்தக் காந்திக் குல்லாய் எவ்வளவு சக்தியைப் பெற்றுவிட்டது!"

"ஏன், வெய்யில் உறைக்காமல் பார்த்துக் கொள்கிறதா?" என்று கேலியாகக் கேட்டான் ரங்கமணி.

"இல்லை, இல்லை. நான் அதைச் சொல்லவில்லை. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம், காந்தியை அவமானப்படுத்துவதற்காகச் சிறைச்சாலையில் கொடுத்துள்ள குல்லாய் இது. ஆனால் இன்று பிரிட்டிஷ் ஆட்சியே இதைக் கண்டு கதிகலங்குகிறதே" என்றார் மில்லர்.

"எனக்கென்னவோ மகாத்மா காந்தி மீது நம்பிக்கை இல்லை" என்றான் ரங்கமணி.

"ஏன்? ஏன் நம்பிக்கை இல்லை?" என்று பரபரப்புடன் கேட்டார்.

"அவருடைய அகிம்சைக் கொள்கைக்கும், ராட்டினத்துக்கும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் பயந்து விடுமா?"

"ஓ...! உங்களுக்கு அகிம்சைத் தத்துவத்தில் சந்தேகம் வந்து விட்டதா? அப்படியானால், அவருடைய சத்தியாக்கிரகத்திலும் நம்பிக்கை இருக்காதே?"

"நம்பிக்கை இல்லை. இதெல்லாம் பேடித்தனமான செயல்தான்" என்று முகத்தைச் சுளித்துக்கொண்டு சொன்னான் ரங்கமணி.

மில்லர் பலமாகத் தம் தலையை ஆட்டி மறுத்தார்.

"தவறு மிஸ்டர் ரங்கமணி, தவறு! நீங்கள் நினைப்பது போல் சத்தியாக்கிரகம் ஒரு சோதா இயக்கமல்ல. பலாத்காரத்தைவிட அன்பினால் தான் மனிதனை இலகுவில் வெல்ல முடியும். இதைத் தான் உங்கள் காந்தி எப்படியோ தெரிந்து கொண்டு விட்டார்!" என்று வியந்து கூறினார். பிறகு சொன்னார்: "மிஸ்டர் ரங்கமணி, உலகத்தில் இன்னும் மனி

தர்கள்தாம் வாழ்கிறார்கள்...சூழ்நிலை அவர்களை எப்படியெல்லாமோ மாற்றியிருக்கலாம். மனிதனைத் தெய்வமாகி விடாமல் தடுத்துக் கொண்டிருப்பது அவனுடைய வயிறுதான். ஆனால், மனிதனை இன்னும் மனிதனாகவே காப்பாற்றிக்கொண் டிருப்பவை அன்பும் அகிம்சையும்தான். இவையில்லை என்றால் எப்போதோ அனைவரும் மிருகமாகி யிருப்போம்.''

''இயற்கைக்கே அகிம்சை விரோதமானது தான்'' என்றான் ரங்கமணி.

''இல்லை, இல்லவே இல்லை. இயற்கை சாதித்தவைகளில், மனிதனைப் படைத்தது தான் மாபெரும் சாதனை. ஏன் தெரியுமா? அவனுக்குத்தான் அகிம்சையைப் பற்றித் தெரியும். உங்கள் நாட்டையும், உங்கள் வாழ்க்கை முறையையும் நான் அளவு கடந்து மோகிப்பதற்கு இதுதான் காரணம். அன்பையும், அகிம்சையையும் உணர்ந்த நாடு இது. அது மட்டுமல்ல, இவைதான் கடைசியில் மிஞ்சக்கூடியவை என்பதை உலகத்துக்குக் கற்றுக் கொடுத்த நாடு. புத்தர் பிறந்த மண் இது'' என்று உணர்ச்சியுடன் கூறினார் மில்லர். பிறகு சொன்னார்:

''இந்த நாட்டில் நான் பிறக்கவில்லையே என்ற ஏக்கம் எனக்கு.''

ரங்கமணி சிரித்தபடி அவரையே பார்த்துக் கொண்டிருந்தான். மில்லர் சொன்னார்:

''மிஸ்டர் ரங்கமணி! முதலில் நானும் உங்களைப் போல்தான் இவைகளை எண்ணிச் சிரித்தேன். ஆனால் இந்த மண்ணில் காலெடுத்து வைத்த உடனேயே நான் புது மனிதனாகி விட்டேன். காந்தியடிகளை நாலைந்து முறை சந்தித்துப் பேசியிருக்கிறேன். நீங்கள் அவரைச் சந்தித்திருக்கிறீர்களா?''

''ஆமாம்!'' என்று தலையை அசைத்தான்.

''எப்போது?''

''எட்டு வருஷங்களுக்குமுன்.''

''சிறுவனா யிருந்திருப்பீர்கள். இப்போது சந்தியுங்கள். அவருடைய சிரிப்பில் உங்கள் மனம் நிறைந்துவிடும். அவருடைய கனிவான பேச்சில் உங்கள் சந்தேகங்க ளெல்லாம் மறைந்து விடும்'' என்றார் மில்லர் மிகுந்த உற்சாகத்துடன்.

''இந்தச் சத்தியாக்கிரகம் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை ஒழிக்கப் போதும் என்று உண்மையிலேயே நம்புகிறீர்களா மிஸ்டர் மில்லர்?'' என்று ரங்கமணி ஆர்வத்தோடு கேட்டான்.

''இது போதுமோ போதாதோ! இது பெரிய காரியங்களைச் சாதித்திருக்கிறது! காந்தியின் சத்தியாக்கிரகம் இதுவரை உலக வரலாற்றில் காணாத ஒரு புதுமை. தாங்களே விரும்பி, ஆயிரம் ஆயிரமாக மக்கள், சிறைவாசத்தில் மோகம் கொண்ட இந்த அதிசயம், உலகத்தில் வேறு எங்குமே நிகழ்ந்தது இல்லை! இது காந்தியடிகளின் சத்தியாக்கிரகத்தின் சக்தி. அகிம்சையின் வெற்றி இது. துப்பாக்கிக் குண்டைவிட இன்று பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் பயப்படும் ஆயுதம் காந்தியடிகளின் சத்தியாக்கிரகம்தான்... அவர் ஓர் அமானுஷ்யமான சக்தி படைத்த மகான். சிரித்துக் கொண்டே லட்சக்கணக்கானவர்களை அகிம்சைப் பாதையில் அழைத்துச் செல்கிறாரே; அவரை நினைக்கும்போது வழி தவறிய ஆடுகளை மேய்க்கும் இயேசுவின் சித்திரம்தான் நினைவுக்கு வருகிறது'' என்று மில்லர் கூறிய போது, அவருடைய கண்களில் நீர் துளித்தது.

ரங்கமணியின் மனம் குழம்பியது. 'மில்லர் சொல்லுகிறபடி அகிம்சைக்கு உண்மையிலேயே அவ்வளவு சக்தி இருக்கிறதா ....?



சக்தி இல்லாமலா ஆயிரமாயிரமாக மக்கள் வலியச் சிறைக்குள் நுழைந்து கொண்டிருக்கிறார்கள்? சக்தி இல்லாமலா இன்று கிரிப்ஸ் இந்தியாவுக்கு ஓடி வருகிறார்?

ரங்கமணியின் மனம் குழம்பித் தவித்தது. உள்ளத்தின் எங்கோ ஒரு மூலையிலிருந்து மென்மையான பகுதி தலைதூக்கிப் பார்த்தது. ஆனால் அறிவு அதை அடித்துக் கீழே தள்ளி விட்டது —

''சுபாஷ்சந்திர போஸை இந்தச் சக்தி ஒன்றும் செய்யவில்லையே! செக்கிழுத்த சிதம்பரம் பிள்ளையை இது தீண்டியதா ? சுப்பிரமணிய சிவா இதை ஒப்புக் கொண்டாரா? திலகர் உயிருடன் இருந்தால், இந்த அஹிம்ஸைத் தத்துவம் அரசியலில் தலைதூக்கியிருக்குமா?''—அவனுடைய அறிவு இப்படி ஓலமிட்டது. ரங்கமணி நிமிர்ந்து உட்கார்ந்தான். மில்லரைப் பார்த்துச் சொன்னான்:

''எங்கள் துரதிர்ஷ்டம், எங்கள் நாட்டில் ஒரே ஒரு சுபாஷ்போஸ்தான் இருக்கிறார்.''

இதைக் கேட்டு மில்லர் சிரித்தார். ''சுபாஷ்போஸை நினைத்துக் கொண்டிருப்பவரிடம் இவ்வளவு நேரம் அஹிம்ஸையைப்பற்றி வீணாகப் பேசியிருக்கிறேன். காதல் வெறியில் உள்ளவனிடம் காவி உடையைப் பற்றிப் பேசினால், அர்த்தம் உண்டா? பசியெடுத்தவனிடம் கடவுளைப் பற்றிய தத்துவத்தை விளக்குவது மாதிரிதான்'' என்று கூறிச் சிரித்துக் கொண்டே ரங்கமணியின் முதுகில் தட்டினார் மில்லர். ரங்கமணி அடக்கமாகச் சிரித்துக் கொண்டான். மில்லர் சொன்னார்:

''சுபாஷ்சந்திரபோஸ் மாபெரும் வீரர்; அவரை நினைத்து இந்த நாடுபெருமைப்படவேண்டும். ஆனால், அவருடைய முயற்சி எவ்வளவு தூரம் வெற்றி யடையும் என்பதைக் காலம்தான் காட்ட வேண்டும்.''

''நீங்கள் அமெரிக்கர்; சுபாஷ்போஸ் ஜெர்மனியோடு உறவாடுவதை நீங்கள் விரும்பாததில் வியப்பில்லை'' என்றான் ரங்கமணி.

''அதற்காக நான் சொல்லவில்லை. இன்றைய சூழ்நிலையில் அவர், ஜெர்மனியோடு உறவாடுவது உயர்ந்த ராஜதந்திரம்தான். ஆனால் வருங்காலத்தில் அரசியல் எப்படி மாறுமோ யார் கண்டார்கள்? சுபாஷ்போஸுக்கு இந்த ஹிட்லர் நம்பிக்கைத் துரோகம் செய்ய மாட்டார் என்பது என்ன நிச்சயம்?'' என்று கூறிக் கொண்டு பெஞ்சில் நன்றாகச் சாய்ந்து படுத்தார் மில்லர்.



"மிஸ்டர் ரங்கமணி, நிருபர் தொழிலில் உங்களுடைய ரசமான அநுபவங்களைக் கூறுங்களேன்" என்றார்.

"அநுபவமா? முதன் முதல் இப்போது தான் வெளியே கிளம்பியிருக்கிறேன். உங்களைக் குருவாகக் கொண்டுதான் இந்தக் கலையைப் பயில வேண்டும்" என்றான் ரங்கமணி.

"ஆரம்ப பாடமே இன்னும் ஆகவில்லையா?" என்று கேட்டுக்கொண்டே ரங்கமணியைப் பார்த்துத் திரும்பிப் பக்கவாட்டில் படுத்தார். பிறகு சொன்னார்: "மிஸ்டர் ரங்கமணி, நிருபர் தொழில் வெறும், சம்பளத்துக்காக மட்டும் பார்க்கும் ஒரு வேலை அல்ல. இது ஒரு கலை. வெறியூட்டும் கலை. செய்திகளை முந்திக் கொண்டு பெறுவதில் நடக்கும் போட்டாப் போட்டியில் வெற்றிபெற வேண்டும் என்ற வெறி உயிரைக்கூடத் தியாகம் செய்யத் தூண்டும். பத்திரிகைத் தொழிலில் 'ஸ்கூப்' என்ற வார்த்தைக்கு ஒரு தனி மகத்துவம் உண்டு. யாருக்கும் கிடைக்க முடியாத செய்தியை ஒரு நிருபர் சாதுரியமாகப் பெற்றுக் கொண்டு பிரசுரிப்பதுதான் 'ஸ்கூப்' என்பது. இந்த 'ஸ்கூப்'புக்காக எத்தனையோ நிருபர்கள் உயிரையே தியாகம் செய்திருக்கிறார்கள். இதில் உங்களுக்கு ஆர்வம் வந்து விட்டால், அநுபவம் தானே வந்து விடும். சூயுக்தியும், சமயோசித புத்தியும் இருந்தால் இந்தத் தொழிலில் வெற்றியடையலாம்."

ரங்கமணி கவனமாகக் கேட்டான். டில்லியில் தன்னுடைய திறமையைச் சோதித்துப் பார்த்துவிட வேண்டும் என்று நினைத்துக் கொண்டான். நிருபர் தொழிலில் அவனுக்கு அக்கறை இல்லை. அதற்காக அவன் டில்லி போகவில்லை. இருந்தாலும், நிருபர் என்ற முறையில் பல தலைவர்களைக் காணும் வாய்ப்பை நினைத்துத்தான் உற்சாகமடைந்தான்.

மில்லர் சிறிது நேரத்தில் தூங்கத் தொடங்கினார். ரங்கமணிக்குப் பகலில் தூக்கம் வராது. ஆகவே பெஞ்சில் படுத்துக்கொண்டு நினைவை அதன் போக்கில் அவிழ்த்து விட்டு விட்டான்.

நினைவு தன் இஷ்டம்போல் எங்கெல்லாமோ பல பேர்களுடன் சுற்றிவிட்டுக் கடைசியில் அம்பாசமுத்திரத்திலிருக்கும் தாத்தாவிடம் சென்றது.

கடந்த ஒரு மாதமாக அவருக்குக் கடிதமே எழுதவில்லை. பாவம், அந்தத் தள்ளாத வயதில் ஏன்தான் இந்தப் பேரன் மீது இத்தனை பாசத்தை வைத்து இதன் பாரம் தாங்காமல் தெளிகிறாரோ ?

தாத்தாவின் நினைவு வந்ததும் ரங்கமணியின் கண்களில் நீர் முட்டியது. இன்று அவன் மீது பாசம் வைத்து அவனையே நினைத்துக் கொண்டு அவனுக்காகவே வாழும் ஒரே ஆத்மா அவர்தான். பேரனுடைய வாழ்வில் தான் அந்தக் கிழவருக்கு எத்தனை அக்கறை...

தாத்தாவின் நினைவில் ரங்கமணி, கண்களை மூடிக் கிடந்தான். கண்களின் ஓரங்களில் கண்ணீர் கசிந்திருந்தது. கண்ணீரைத் துடைத்து விட்டுச் சன்னல் வழியாகப் பார்த்தான். வண்டி வேகமாக ஓடிக் கொண்டிருந்தது. ஓட்டத்தின் தாலாட்டில் மில்லர் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தார்.

மூன்றாம் நாள் காலையில் ரயில் வண்டி, வெகு தூரத்திலிருந்து வருகிறேன் என்று சொல்வது போல் நீண்ட பெருமூச்சைவிட்டுக் கொண்டு புதுதில்லி ஸ்டேஷனை நெருங்கிக் கொண்டிருந்தது. மில்லர் பரபரப்புடன் தம்முடைய சாமான்களைப் பையில் திணித்துக் கொண்டிருந்தார். ரங்கமணி சன்னல் பக்கமாக உட்கார்ந்து கொண்டு வெளியே பார்வையைச் செலுத்திக் கொண்டிருந்தான். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் இந்தியத் தலைநகரான புதுதில்லியின் ரயில்வே ஸ்டேஷனுக்குள் நுழைவதற்காக விரைந்து சென்று கொண்டிருந்தது எக்ஸ்பிரஸ்.

✻ ✻ ✻

காலையில் குளித்துவிட்டுப் பூஜை அறையிலிருந்த விபூதியை அள்ளி நெற்றியில் இட்டுக் கொண்டிருந்தாள் திரிவேணி. மனம், ரங்கமணிக்காகக் கடவுளை இரகசியமாகப் பிரார்த்தித்துக் கொண்டது. "எந்தச் சங்கடமும் நேராமல் என்னிடம் அவரைக் கொண்டு வந்து சேர்த்துவிடு" என்று வாய் முணுமுணுத்தது. அந்தச் சமயத்தில் குமார் ஒரு கடிதத்துடன் உள்ளே ஓடி வந்தான். ஆவலோடு அதை வாங்கி உறையைப் பார்த்தாள். கையெழுத்திலிருந்தே அது ரங்கமணி அனுப்பிய கடிதம் என்பதை உணர்ந்து கொண்டாள். உறையின்மீது புது டில்லி என்ற தபால் முத்திரையும் இருந்தது. திரிவேணியின் இதயத்தில் இனிமை சூழ்ந்தது. உள்ளக் கிளர்ச்சியோடு உறையைக் கிழித்தாள். உள்ளே இரண்டு கடிதங்கள் இருந்தன. ஒன்றில் அத்தைக்கு என்று வெளியில் எழுதியிருந்தது.

"டேய்! இதை அத்தையிடம் கொண்டு போய்க் கொடு" என்று குமாரிடம் அந்தக் கடிதத்தைக் கொடுத்தனுப்பி விட்டு, தனக்கு வந்த கடிதத்தைப் படிக்கத் தன்னுடைய அறைக்குள் ஓடினாள். கட்டிலில் சாய்ந்து கொண்டாள். தலையில் பட்டிருந்த காயம் ஆறிவிட்டாலும், இன்னும் உள் புண் இருந்ததால் புண்ணின் மீது பிளாஸ்திரி போட்டிருந்தாள். கட்டிலில் வேகமாகச் சாய்ந்ததால் புண்ணில் இலேசாக வலி எடுத்தது. ஒரு கையால் தலையைத் தடவிக் கொண்டு மறு கையால் கடிதத்தைப் பிரித்தாள்.

மிகச் சுருக்கமான கடிதம்தான்.

என்ன கஞ்சத்தனம்! நாலைந்து பக்கங்கள் எழுதினால் என்னவாம்? அதற்குக்கூட நேரமில்லாத இந்தப் புரட்சி வீரர், டில்லியில் என்னதான் செய்கிறாரோ.....!

பாவம், திரிவேணி! அந்தச் சிக்கனமான கடிதத்தையும் திரும்பத் திரும்பப் படித்தாள். இல்லாத வீட்டுக் குழந்தை காலிச் சட்டியைத் திரும்பத் திரும்ப நக்குவது போல்தான். அதிலும் ஒரு ரசனை இருந்தது. அவன் எழுதியிருந்தான்:

"அன்புள்ள திரிவேணி,

என்னைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். பத்திரமாயிருக்கிறேன். துணைக்கு ஓர் அமெரிக்க நண்பர் இருக்கிறார். எனக்கு ஒரு

# குழந்தைகளுக்கு சேமிப்பில் அக்கறை இல்லாதது ஏன்

காரணம் எல்லோருக்கும் தெரிந்ததுதான்—அவர்களுக்கு தங்களைப் பற்றி சிந்திக்கும் திறனோ, தம்மைத் தாமே பேணிப் பாதுகாத்துக் கொள்ளும் ஆற்றலோ கிடையாது—மற்றவர்களுடைய அன்பும் பராமரிப்புமே அவர்களுக்குத் துணை. ஆனால் நீங்களோ? உங்களுடைய எதிர்காலத்தைப் பற்றியும், அவர்களைப் போன்ற சின்னஞ்சிறுசுகளைப் பற்றியும் நீங்கள் சிந்தித்தே ஆகவேண்டியிருக்கிறது. நீங்கள் தற்காலத்துக்கும், வருங்காலத்துக்கும் உழைத்துச் சம்பாதித்து, சேமித்தாகவேண்டும். ஒவ்வொரு மாதமும் நீங்கள் சேமிக்கும் சிறு தொகைகூட, வட்டியை தருவதுடன், உங்கள் எதிர்காலத்தில்—விசேஷ நிகழ்ச்சிகளுக்கோ, இக்கட்டான நிலையிலோ—உங்களுக்குக் கைகொடுத்துதவும். இன்றே கனரா பாங்கில் ஒரு சேமிப்புக் கணக்கை ஆரம்பியுங்கள். கனரா பாங்கின் வாடிக்கையாளர்கள் அனுபவிக்கும் அந்த அற்புத மனநிறைவையும், பாதுகாப்பு உணர்ச்சியையும், இன்றும், இன்றுபோல் என்றும் அனுபவித்து மகிழுங்கள்.




## கனரா பாங்க் லிமிடெட்

பதிவுபெற்ற அலுவலகம்: [illegible] நிர்வாக அலுவலகம்: 112, ஜயசாமராஜேந்திர ரோ, பெங்களூர்.

ESTA'S-CB-17 TM



''நேத்திக்கு எங்க வீட்டிலே 'போன்' பண்ணின போது, என் பையன் உங்கிட்டே போன் சார்ஜ் 15 பைசா கேட்டானாமே? உதவாக்கரைப் பயல்...!''

''போகட்டும்; பரவாயில்லே 15 பைசா தானே!''

''ஏது 15 பைசா? அந்தக் காலம் எப்பவோ போச்சண்ணா! இப்போ ஒரு போன் காலுக்கு 30 பைசா. இதைத் தெரிஞ்சு கேட்டு வாங்கத் தெரியலே அந்த மடப்பயலுக்கு!''

''....! ....? ....!''

---

பயமும் இல்லை. உன்னுடைய உடம்பைக் கவனித்துக் கொள். தலைப்புண் ஆறி விட்டதா? எனக்கு அதுதான் கவலையா யிருக்கிறது.

அன்புடன்,

ரங்கமணி''

''பெரிய கவலை. இவரைப் பற்றி யார் கவலைப்படுகிறார்களாம்'' என்று வாய்க்குள்ளேயே கூறிக் கொண்டு, தனக்குள்ளேயே சிரித்துக் கொண்டாள்.

''தம்பி! கடிதம் போட்டிருக்கிறானா?'' என்று கேட்டுக் கொண்டே அத்தை வந்தாள். பரபரப்புடன் தனக்கு வந்த கடிதத்தைத் தலையணைக்கு அடியில் மறைத்து வைத்தாள் திரிவேணி.

''தங்கமான பிள்ளை. எவ்வளவு பிரியமாகக் கடிதம் எழுதியிருக்கிறான்!.... உனக்கு அவன் கடிதம் ஒன்றும் எழுதவில்லையா?'' — அத்தை ஆவலோடு கேட்டாள்.

''அக்காவுக்கும் வந்திருக்கிறது'' என்று முந்திக் கொண்டு பதில் சொன்னான், அங்கு வந்த குமார்.

''சௌக்கியமாகப் போய்ச் சேர்ந்ததாக எழுதியிருக்கிறார்'' என்றாள் திரிவேணி நாணத்துடன். அத்தையும் குமாரும் சென்றதும் ரங்கமணிக்குக் கடிதம் எழுதத் தொடங்கினாள்.

எப்படியெல்லாமோ கடிதத்தை ஆரம்பித்தாள், கிழித்தாள். கடைசியில் ஒருவிதமாக எழுதி முடித்து விட்டு, அதை ஏழெட்டு முறை திரும்பத் திரும்பப் படித்துப் பார்த்தாள். கடிதத்தின் கடைசியில் எழுதியிருந்தாள்—

'....நீங்கள் புரட்சிக்காரரா யிருக்கலாம். அஹிம்சையின் பரம்பரை விரோதியாகக் கூட இருக்கலாம். இருந்தாலும், [illegible]க்காக ஒருமுறை — உங்களுக்காக இல்லை — எனக்காக ஒரு முறை, ஒரே ஒரு முறை மகாத்மாவைத் தில்லியில் சந்தியுங்கள். நீங்கள் சந்திப்பீர்கள் என்று 'மகாத்மாவுக்குக் கடிதம் எழுதியிருக்கிறேன். மகாத்மாவின் காரியதரிசியான மகாதேவ தேசாய்க்கும் எழுதியிருக்கிறேன். தேசாய், உங்களைக் கட்டாயம் எதிர்பார்ப்பார்....'

தன்னுடைய வேண்டுகோளை ரங்கமணி நிறைவேற்றுவான் என்ற நம்பிக்கையில் தான் எழுதினாள். கடிதத்தை எழுதி முடித்த போது குமார் உள்ளே வந்தான்.

''அக்கா! சந்தைக்குப் போகிறேன், ஏதாவது வேண்டுமா?'' என்று கேட்டான்.

''டேய், கொஞ்சம் இருடா, இந்தக் கடிதத்தைப் போகிற வழியில் தபாலில் சேர்த்துவிடு'' என்று கூறிக் கொண்டே கடிதத்தை மடித்து உறையில் போட்டு ஒட்டினாள். உறையின் மீது ரங்கமணியின் விலாசத்தை எழுதுவதற்காக முனைந்தபோது பெரிய ஏமாற்றமடைந்தாள். அவன் எழுதியிருந்த கடிதத்தில் விலாசம் இல்லை. புது தில்லி என்று மட்டும் எழுதியிருந்தான். திரிவேணிக்கு அவன் மீது கோபம் கூட வந்தது. அவனுடைய விலாசம் சர்தார் சொக்கலிங்கம் பிள்ளைக்குத் தெரிந்திருக்கும். ஆனால் என்ன பயன்? அவரிடம் கேட்டால் விலாசத்தைச் சொல்ல மாட்டார், இரகசியம் என்று கூறி விடுவார்.

பாவம், திரிவேணி தவித்தாள். ஆசையோடு எழுதிய கடிதம், பரிதாபமாக மேசை மீது கிடந்தது.

''நீ போடா, அப்புறம் போட்டுக்கொள்ளலாம்'' என்று குமாரை அனுப்பிவிட்டாள். அவன் சென்றபிறகு தான் எழுதிய கடிதத்தைக் கிழித்துக் குப்பைக் கூடையில் வீசினாள். ஆயாசத்துடன் கட்டிலில் சாய்ந்தாள்.

அப்போது வாசலில் வண்டி வந்து நிற்கும் சத்தம் கேட்டது. திரிவேணி கட்டிலிலிருந்து எழுந்து, சன்னல் வழியாக வீதியில் பார்த்தாள். வாசலில் ஓர் ஒற்றை மாட்டு வண்டி நின்று கொண்டிருந்தது. அதிலிருந்து ரங்கமணியின் தாத்தா இறங்கினார். பழைய காலத்துக் கோட்டும், தலைப்பாகையும் அணிந்து, பெரிய கனவானைப் போல் காட்சியளித்தார். வண்டிக்காரனுக்குக் கூலி கொடுத்து அனுப்பிவிட்டு, கம்பை ஊன்றிக் கொண்டு, நடைமீது ஏறினார். திரிவேணி, விரைந்து வாசலுக்கு வந்தாள்.

நடையேறி, வாசலுக்கு வந்த கிழவர், நிமிர்ந்து பார்த்தார். வாசலில் திரிவேணியைக் கண்டதும் உற்று அவளைப் பார்த்தார். மூக்கின் நுனிக்கு வந்திருந்த கண்ணாடியைச் சரி செய்து கொண்டு அவளைக் கூர்ந்து பார்த்தார். அவள் புன்முறுவலுடன் அவரை வரவேற்றாள்.

''வாருங்கள்'' என்றாள்.

''இது சர்தார் சொக்கலிங்கம் பிள்ளை...''

''ஆமாம், அவர்களுடைய வீடுதான். வாருங்கள்'' என்று உபசரித்தாள். கிழவர், கம்பை ஊன்றிக் கொண்டு அவளைப் பின் தொடர்ந்தார்.

முன் அறையில் கிழவரை ஒரு சோபாவில் அமர்த்திவிட்டு, அவருக்கு எதிரே ஒரு நாற்காலியில் திரிவேணி அமர்ந்தாள்.

## வனங்கள் வளருகின்றன



1960-ல் உதகமண்டலத்தில் ஒரு வன மகோற்சவம் ஸர் சி. பி. ராமஸ்வாமி அய்யர் செடி நாட்டுவிழா நடத்திவைத்தார். 1964-ல் நடந்த வன மகோற்சவத்துக்கு சி. பி. ராமஸ்வாமி அய்யர் அழைக்கப்பட்டுச் செடி நட்டார். அப்பொழுது அவர் விழாக் காரியதரிசியைக் கூப்பிட்டு ''நான்கு வருடங்களுக்கு முன் கூட செடி நட்ட ஞாபகம் இருக்கிறதே. அது எந்த இடத்தில்?'' என்று கேட்டார்.

''இதோ, இப்பொழுது நட்டீர்களே, அதே இடத்தில் தான்!'' என்றார் காரியதரிசி.

— கிரிஜாதேவி

---

கிழவர் ஒருமுறை அந்த அறையைச் சுற்றிப் பார்த்தார். மகாத்மா காந்தியின் படங்கள் சுவரில் மாட்டப் பட்டிருந்தன. வேறுபல தலைவர்களின் படங்களும் சுவரில் தொங்கின.

''அம்மா.... ரங்கமணி, இங்கேதானே இருக்கிறான்?''

''நீங்கள் அவருடைய தாத்தாவா?''

''ஆமாம். உனக்கு என்னைத் தெரியுமா?''

''அவர் அடிக்கடி உங்களைப் பற்றிச் சொல்லுவார்'' என்றாள் திரிவேணி. கிழவர் அவளைக் கூர்ந்து பார்த்தார். அவளுடைய வயது, அழகு எல்லாவற்றையும் எடை போட்டார். பிறகு ரங்கமணியை நினைத்து ஒரு நீண்ட பெருமூச்சு விட்டார்.

''உன் பெயர்தானே திரிவேணியா?'' கிழவர் கேட்டார், திரிவேணி திகைத்தாள்.

''ஆமாம். என் பெயர் உங்களுக்கு எப்படித் தெரியும் தாத்தா?''

''அந்தப் பயல் எழுதியிருந்தான்.''

''என்ன எழுதியிருந்தார்?'' — மிகுந்த ஆர்வத்தோடு கேட்டாள் திரிவேணி.

''ஏதோ எழுதியிருந்தான். கொண்டு வந்திருக்கிறேன். அப்புறம் தருகிறேன். அவன் எங்கே?''

''உங்களுக்கு அவர் கடிதம் எழுதவில்லையா? அவர் ஊரில் இல்லையே.''

''இல்லையா? அவன் எனக்கு எழுதி ஒரு மாதத்துக்கு மேலாகி விட்டது. கடிதமும் எழுதவில்லை; அவனும் வரவில்லை. நேரே பார்த்துவிட்டு வரலாம் என்று வந்தேன். எங்கே போயிருக்கிறான்?''

''ஏதோ வேலையாகத் தில்லிக்கு.....''

''தில்லிக்கா? நல்ல பிள்ளை! போகு முன்னால் ஒரு கடிதம் எழுதக் கூடாதா? விளையாட்டும் பிள்ளை மாதிரிதான். அவனைக் கவனிக்க யாருமில்லை. தான்தோன்றியாகச் சுற்றுகிறான்'' என்றார் வருத்தத்துடன்.

''ஏன், அவரைக் கவனித்துக் கொள்ள நாங்கள் இல்லையா? நீங்கள் ஒன்றுக்கும் கவலைப்பட வேண்டாம்!''

அவளை உற்றுப் பார்த்தார் கிழவர். என்ன நினைத்தாரோ, சட்டென்று கோட்டுப் பையைத் தடவி, ஒரு கடிதத்தை எடுத்து அவளிடம் கொடுத்தார். அது கிழவருக்கு ரங்கமணி எழுதியது. அதில் எழுதியிருந்தான்:

''...என்னைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். நான் தங்கியிருக்கும் இடத்தில் இரண்டு பெண்கள் இருக்கிறார்கள். அவர்களுடைய கண்காணிப்பில் உங்களுடைய பேரன் கொழுத்து விடுவான். சொக்கலிங்கம் பிள்ளையின் தங்கை — அவர்களை அத்தை என்று தான் எல்லோரும் கூப்பிடுகிறார்கள் — தம்முடைய மகனை வளர்ப்பதுபோல் என்னை வளர்க்கிறார்கள். திரிவேணி என்று ஒருத்தி இருக்கிறாள். காந்தியின் பரம சிஷ்யை: பிடிவாதம் உண்டு, கொஞ்சம் குறும்பும் உண்டு. அந்தக் காலத்தில் ஊர்வலங்களிலும் பொதுக் கூட்டங்களிலும் அப்பா கலந்து கொண்டதைக் கண்டு பயந்தீர்களே, இந்தப் பெண்ணைப் பார்த்தால் திகைத்து விடுவீர்கள். போலீஸ் தடியடி, துப்பாக்கி எல்லாம் இவளுக்கு விளையாட்டுத்தான். இவள் மேடையில் பேசினால், மழை பொழிந்த மாதிரிதான். கேட்பவர்கள் அலை வரும் சுதந்திர ஆர்வத்தில் நனைவார்கள்.''

கடிதத்தைப் படித்த திரிவேணி, மீண்டும் ஒரு முறை படித்தாள்.

''இந்தக் கடிதம் என்னிடமே இருக்கட்டுமா?'' என்று கேட்டாள்.

''வைத்துக் கொள்ளேன். எனக்கு எதற்கு? அதில்தான் இந்த வீட்டு விலாசம் எழுதியிருந்தான்'' என்றார் கிழவர். திரிவேணி கடிதத்தை மடித்து மேஜைக்குள் பத்திரமாக வைத்தாள்.

கிழவர், உடனே ஊருக்குக் கிளம்பினார். ஆனால் திரிவேணியும் அத்தையும் விடவில்லை. ஒரு வாரம் வரை அவரை அங்கேயே தங்க வைத்து விட்டார்கள். அத்தையிடம் தம்முடைய பேரனைப் பற்றிய கவலைகளையெல்லாம் சொல்லித் தீர்த்தார். அவ்வளவையும் திரிவேணி பக்கத்திலிருந்து கேட்டாள். அத்தையிடம் கிழவர் சொன்னார்:

''என்னவோ அம்மா, இந்தப் பயலை நினைத்துக் கொண்டுதான் காலத்தை ஓட்டிக் கொண்டிருக்கிறேன். நீங்களாவது சொல்லக் கூடாதா, இவனை ஒரு கலியாணம் செய்து கொள்ளச் சொல்லி.''

''எனக்கும் அந்த நினைவுதான். ஆனால் சுதந்திரம் கிடைத்த பிறகுதான் அதைப் பற்றி யோசிக்க வேண்டும் என்கிறானே'' என்றாள், அத்தை.

''அம்மா குழந்தை, நீயாவது சொல்லக் கூடாதா?'' என்று திரிவேணியைப் பார்த்துக் கேட்டார், கிழவர். அவள் முகம் குபீரென்று சிவந்து விட்டது. அத்தை உள்ளுக்குள் சிரித்துக் கொண்டாள். ''திரிவேணி சொன்னால் கேட்டாலும்கேட்பான்'' என்றாள்.

''உங்கள் சொல்லுக்கு அடங்காதவரா எனக்கு அடங்கி விடப் போகிறார்?'' என்று கூறிவிட்டு மெதுவாக அங்கிருந்து நழுவி விட்டாள் திரிவேணி.

(தொடரும்)

# இப்பொழுது நடைபெறுகிறது

நடிகர் மன்னன் **ஜெமினிகணேஷ்** நடிக்கும்

***100*வது படம்....**



ராஜலட்சுமி
பிக்சர்ஸ்

# சீதா

திரைக்கதை
வசனம்
டைரக்ஷன்

**A.P.நாகராஜன்**

தயாரிப்பு-வயலின் K.V.மஹாதேவன்

## ஸ்டார்-பிராட்வே
## மேகலா-நூர்ஜஹான்

மற்றும் தென்னாடெங்கும்

SEMBI

அத்தியாயம் 13

## பாச அலைகள்

வேலவன் கோதைக்கு ஏற்பட்ட வியப்புக்கு அளவேயில்லை. வான மண்டலக் கடம்பனுடைய உள்ளத்தில் அப்படிப்பட்ட ஒரு பாசம் இருந்ததா?

தமிழகத்தில் மட்டுமல்லாமல், கடல் கடந்த நாடுகளிலும் கடம்பன் என்ற பெயரைக் கேட்டாலே யாவரும் நடுங்கும்படியாகத் தனது கொடுமை



யைக் கடல் முழுதும் பரப்பி நின்ற அந்தக் கொள்ளைக் கூட்டத்தாரின் தலைவனுக்கு, நீலவல்லியிடம் அத்தனை அன்பு இருந்ததா? அவனால் நம்ப முடியவில்லை!

நீலவல்லி சொன்னாள்:

''அன்பரே! மெய்யாகவே சொல்லுகிறேன். கடம்ப மன்னனிடமிருந்து விடை பெறும்போது மணிமாலையும் நானும் கலங்கினோம். கண்ணீர் விட்டோம். கடம்பனைப் பார்ப்பது அதுதான் கடைசி முறை என்ற எண்ணம் ஏற்பட்டதும் என்னையும் மீறி நான் அழுதுவிட்டேன். அதுவரை ஏற்பட்டிராத ஒரு பாசம் என் உள்ளத்தையும் மீறி எழுந்து என்னைத் துன்புறுத்தியது. இதைக் கண்டு மன்னன் கலக்கம் அடைந்தாலும், உறுதியைத் தளரவிடவில்லை. 'புறப்படுங்கள் புறப்படுங்கள்' என்று எங்களை அவசரப்படுத்தவே, நாங்களும் எங்கள் மனத்தைக் கல்லாக்கிக் கொண்டு வெள்ளைத் தீவிலிருந்து புறப்பட்டோம்!''

வல்லியின் கண்கள் மறுபடியும் கலங்கின. அவளுடைய இதயத்தில் வானமண்டலக் கடம்பனுடைய பாசத்தை எண்ணி எண்ணி அன்பு சுரந்தது. வெள்ளைத் தீவு மன்னனுடைய வாழ்வையும் அது முடிந்த முறையையும் நினைத்துக் கண்ணீர் வடித்தாள் நீலவல்லி.

பவளத் தீவின் வெளில் மாடத்து உம்பரிலே மறுபடியும் மோனம் நிலவியது. வேலவன் கேட்டான்:

''வல்லி! தன்னுடைய முடிவு காலம் நெருங்கி விட்டதென்பதை உணர்ந்த கடம்பன், உன்னையும் மணிமாலையையும் இப் பவளத் தீவுக்கு அனுப்புவது என்று எங்ஙனம் முடிவு செய்தான்?''

வேலவன் கோதை இப்படிக் கேட்டதும் நீலவல்லி மாடத்திலிருந்து எழுந்தாள். அரமியத் தலமாக அமைந்த முற்றத்துக்கு வந்தார்கள் வேலவனும் வல்லியும்.

கண்ணுக்கு எட்டியதிசை எங்கும் கருங்கடல். முற்றத்திலிருந்து பார்த்தால் ஒரே நீல நெடுங்கடல்! அலைகளை வீசிப் புரண்டு கொண்டிருந்தது. அந்தக் கருங்கடலையும் அதைத் தொட்டுத்





முகத்தின்
முறுவலுக்குத்
தேவை
முழுப் பாதுகாப்பு...

# கிருமிகள் அணுகாதவாறு உங்கள் வாய்க்கு முழுப் பாதுகாப்புத் தருவது ஸிக்னல்

**அதன் செவ் வரிகளிலிருப்பது**
**கிருமிகளைத் தாக்கும் ஹெக்ஸாக்ளோரபீன்**

ஸிக்னல் பற்பசையின் செவ்வரிகளே சொல்லும்: கிருமிகளைத் தாக்கும் ஹெக்ஸாக்ளோரபீன் அடங்கியுள்ளதற்கு சாட்சி. முகத்தின் முறுவல் முத்தெனப் போற்றிக் காப்பீர்.... கிருமிகள் அணுகாது வாய் முழுவதையும் காத்துக்கொள்ள ஸிக்னல் உபயோகியுங்கள். புதுமையின்பச் சுவை, மிதமிஞ்சிய நுரை...வாயார உங்கள் பற்கள் வெண்மை பொங்கும்: வாய்நிரம்பும் தூய்மையோடு உங்கள் வாய் மலரும். ஸிக்னல் புன்னகையே ஆரோக்கியப் புன்னகை!







இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் தரமான தயாரிப்பு

லின்டாஸ்-SG. 5-140 TM

தழுவி நின்ற நீல வானத்தையும் பார்த்துப் பெருமூச்சு விட்டுக்கொண்டே நீலவல்லி பேசத் தொடங்கினாள். சேரர்கள் படையெடுத்து வந்த அந்தத் தருணத்திலிருந்து வெள்ளைத் தீவிலே என்ன நடந்தது என்பதை வேலவனுக்குச் சொன்னாள் நீலவல்லி. அந்தத் துயர நிகழ்ச்சிகளுக்கெல்லாம் சான்று கூறிக்கொண்டே நீலவானமும் நெடுங்கடலும் வல்லி மொழிந்த வரலாற்றைக் கேட்டு வேலவன்கோதையைப் போலவே நெட்டுயிர்த்து விம்மின !

ஃ ஃ ஃ



சேரர்கள் பெரும் படை கொண்டு செங்குட்டுவனின் தலைமையிலே ஒரே சீற்றத்தோடு வெள்ளைத் தீவை நோக்கி வருகிறார்கள் என்ற செய்தி, வான மண்டலக் கடம்பனுக்கு ஒரு வாரத்துக்கு முன்னதாகவே ஒற்றர்கள் மூலம் தெரியவந்தது. போர் மூளுகிறது. பெரும் போராக அது மூளுகிறது என்பதை உணர்ந்து கொண்ட கடம்பன் அது பற்றித் திகைப்பு அடையவில்லை; என்றாலும் துயரம் அடைந்தான்.

வான மண்டலக் கடம்பனுடைய துயரத்துக்குக் காரணங்கள் பல இருந்தன. கடந்த சில மாதங்களாகவே அவனுடைய உள்ளத்தில் இதுவரை இல்லாத புதிய உணர்ச்சிகள் பல தோன்றி ஏற்கனவே சிந்தனையைக் குழப்பி வந்தன. முக்கியமாக அந்தத் தீவிலிருந்து வெளியேற்றிய துறவிகளின் நினைவு அடிக்கடி மனத்தில் எழுந்து, ஏதேதோ அழற்சியை உண்டுபண்ணி வந்தது.

ஊழ்வினையிலும், விதியிலும், வினைப் பயனிலும் இதுவரை நம்பிக்கை வைத்திராத கடம்பனுக்கு வயதின் காரணமாகவும், வாழ்வில் ஏற்பட்ட சோர்வு காரணமாகவும் புதியதொரு அச்சம் அவனையும் அறியாமல் முளைவிடத் தொடங்கியது. இளமையில், பருவத்தின் வலிமையில், இத்தகைய நம்பிக்கைகள் எழுந்தால் அறியாமை என்று தள்ளிவிடுவான். ஆனால் இப்போது முதுமையின் காரணத்தால் பழைய தெம்பு இல்லை. எதையும் ஆர அமர ஓய்வோடு இருந்து சிந்திப்பதற்கு வேண்டிய வயது இது. தமிழகத்து மன்னர்கள் துயில் கலைந்து எழுந்து விட்டார்கள் என்பதும், துறவிகள் எல்லாரும் தங்களுக்குள் ஒன்று கலந்து செல்வத்தி ட அடிகளின் தலைமையிலே

# ஐந்தடுக்கு மாளிகையல்ல ஐந்தடுக்கு ஏரி



கோலா பெனின்சுலாவின் கடற்கரையை அடுத்துள்ள ஒரு பகுதியில் மொகில்னாய் என்ற ஏரி இருக்கிறது. இது விசித்திரமான தன்மை படைத்தது. மேல் மட்டத்தில் சுத்தமான நீர் காணப்படுகிறது. இந்த நீரில் நதி, ஏரிகளில் வாழும் மீன் வகைகள் வாழ்கின்றன. இதன் அடி மட்டத்துக்குக் கீழே மிகக் கரிப்பான நீர் உள்ளது. இதில் ஜெல்லி மீன் முதலியன உயிர் வாழ்கின்றன. இதற்குக் கீழே சாதாரணக் கடல் நீர் ஓர் எல்லைவரை உள்ளது. இதில் கடல் வாழ் சிறிய மீன்களும் கடல் பூச்சிகளும் 'ஸ்டார் பிஷ்'ஷும் காணப்படுகின்றன. இதற்குக் கீழுள்ள நீர் சிவப்பாக இருக்கிறது. காரணம் இது பாக்டீரியாக்களால் நிறைந்திருக்கிறது. ஏரியின் அடிமட்டத்திலோ ஜீவராசிகளே வசிக்க முடியாத தண்ணீர் உள்ளது. 'சல்ப்யூரேட்டட் ஹைட்ரஜன்' நிறைந்த நீர். இப்படி ஐந்து அடுக்குகளைக் கொண்ட இந்த ஏரி ஓர் அதிசயம்தானே?

ஆதாரம்: பயோனியர்.

தங்கள் முயற்சிகளையெல்லாம் மையப்படுத்தி வருகிறார்கள் என்பதும், கடம்பனுக்கு இதுவரை இல்லாத புதிய எண்ணங்களை எழுப்பின! துறவிகளைக் கொடுமைப்படுத்தியதற்குமாறாக இப்போது துறவிகளால் தனக்குக் கொடுமை நேரப் போகிறதோ என்று ஒரு புதிய எண்ணம். ஆனால் மறு விநாடியே ஒரு சிரிப்பு! என்ன கேடு நமக்கு நேர்ந்துவிடக் கூடும் என்று ஒரு வேகம்! நேர்ந்தாலும் என்ன, எப்படியும் தான் மடிய வேண்டிய காலம் வரப் போகிறது. போரிலோ அல்லது முதுமையிலோ தனக்கு மரணம் வரப்போவது உறுதி. அதைப் பற்றிக் கவலையில்லை. ஆனால் துறவிகளுக்கு ஒரு மறுமலர்ச்சி உண்டாகித் தமிழகத்திலே எல்லா மன்னர்களும் ஒன்று கூடித் தன்னைப் பழி தீர்க்கப் போகிறார்கள் என்றால், துறவிகளுடைய கொள்கைக்கு அல்லவா அது வெற்றியாகும் ! அப்படியானால் இந்த வெள்ளைத் தீவிலே உள்ள கல்விக்கூடங்களிலே, ஊழ்வினை பற்றியும் எதிர்காலம் பற்றியும் ஏதேதோ கொள்கைகளை எழுதி வைத்திருக்கிறார்களே இந்தத் துறவிகள். அவர்களுடைய எழுத்துக்கு ஏதோ ஓர் ஆற்றல் இருக்கிறது என்றல்லவா ஆகிறது ! முக்கால உணர்வு என்று ஒன்றிருப்பது அல்லவா உறுதியாகிறது!

இப்படி நினைத்து நினைத்து வான மண்டலக் கடம்பன் தன் மனத்துக்குள்ளேயே தன்னையும் மீறித் துறவிக

னிடத்திலே ஒரு வகையான அச்சத்தை வளர்த்துக் கொள்ளத் தொடங்கினான்! இப்போது இந்நிலையில் சேரர்கள் படையெடுத்து வருகிறார்கள் என்பதும், அவர்களுக்குத் துணையாகப் புன்னாட்டு வேணியர்களும் கொங்கர்களுமே வருகிறார்கள் என்பதும் கேட்டுக் கடம்பனுக்கு மெய்யாகவே சமணத் துறவிகளின் மூக்கால உணர்விலே ஒரு புத்துணர்ச்சி ஏற்பட்டது. சேரர்களின் படை வலிமை மிகுந்தது என்றும், செங்குட்டுவனே தலைமை தாங்கி நடத்தி வருகிறான் என்றும் கேட்டதும், மனத்தினுள் ஒரு முடிவுக்கு வந்தான் கடம்பன்!

வெள்ளைத் தீவுக் கோட்டை வலிமை மிகுந்த இன்னலிய கோட்டை. அதன் மதில்களிலே உள்ள இயந்திரப் பொறிகளோ என்றால், யவனர்களும் கண்டு நடுங்கக் கூடிய விந்தையாற்றல் பொருந்தியவை! அந்தப் பொறிகளை இயக்கினால், சேரர்களின் படை எத்தனை முயன்றாலும் கோட்டையை எளிதில் கைப்பற்ற முடியாது. ஐயமில்லை. போரானது நிலைச் செருவாகப் பல நாட்கள் தொடர்ந்து நடக்கும். என்றாலும் எத்தனை நாள் இப்படித் தொடர்ந்து போர் நடந்தாலும், செங்குட்டுவன் பின் வாங்கப் போவதில்லை. சேரர்களுக்குத் துணையாகத் தமிழகத்தின் குறுநில மன்னர்கள் அனைவருமே மேலும் ஒன்று சேர்வார்கள். மேலும் மேலும் படைகள் வந்து கொண்டே இருக்கும். எத்தனை நாட்கள் கோட்டைக்குள்ளிருந்து கொண்டே இந்தப் படைகளை எதிர்த்துப் போரிடுவது?

எத்தனை வீரத்தோடு இயந்திரப் பொறிகளை இயக்கி, எத்தனை ஆற்றலோடு எதிர்த்துப் போரிட்டாலும், முடிவின்றி மேலே மேலே வந்து கொண்டிருக்கும் படைகளை எத்தனை நாட்கள் தாக்கி நைவது? மேலும் மேலும் வந்து தாக்கியவண்ணமாக இருக்கும் எதிரிப் படைகள் இறுதியில் எப்பாடு பட்டாவது கோட்டையைப் பிடித்தே தீரும். அப்படிப் பிடிக்கும் போது கோட்டை எந்த நிலையில் இருக்கும்? தமிழர்களின் போராற்றலுக்குச் சான்றாக வளர்ந்து நிற்கும் வெள்ளைத் தீவுக் கோட்டையும், தமிழர்களின் கலைத் திறனுக்குச் சான்றாக நிற்கும் எண்ணற்ற கலைப் பொருள்களும், அரண்மனைச் சிறப்புகளும் எல்லாம் தரையோடு தரையாகத் தகர்ந்து விழுந்து விடும்! வெள்ளைத் தீவுக்குள் ஒரே சீற்றத்தோடு எதிரிப் படைகள் புகுந்தால், கலைக் கழகங்கள், பௌத்தப் பள்ளிகள், பிரிவேணைகள், அழிவற்ற அறிவுக் கருவூலங்களான ஏட்டுச் சுவடிகள், சிற்பங்கள், சித்திரங்கள், கலை விந்தைகள் எல்லாம் — போர் என்ற மாபெரும் பூதத்தின் கோபக் கொடுங் கனலிலே வெந்து சாம்பலாகி விடும்! இத்தனை ஆண்டுகள் ஏதேதோ முயன்று எப்படி யெப்படியோ பாதுகாத்துப் பேணிய விலை மதிப்பற்ற பொருள்கள் எல்லாம் அழிந்து ஒழிந்து வெள்ளைத் தீவு முழுவதுமே ஒரே சுடுகாடாகப் போய்விடுமே!

இப்படி எண்ணியதும் வான மண்டலக் கடம்பனுக்கு உள்ளத்தில் தீப் பிடித்தது.

கோட்டையைத் தாக்கிப் பிடிப்பதற்கு முன்பு நாமே போய்க் கடல் மீதிலேயே அவர்களை எதிர்த்துப் போரிட்டால் என்ன? நமக்குப் பின் இந்தக் கோட்டையாவது நமது ஆற்றலுக்குச் சான்று கூறிக் கொண்டு நிற்குமே! அது ஒன்றையாவது அழிவிலிருந்து காப்பாற்றலாமே!

இப்படி ஒரு விந்தை எண்ணம் கடம்பனுக்கு ஏற்பட்டது. உடனே தனக்குள் சிரித்துக் கொண்டான்! தன்னையே நோக்கித் தனக்குள் சிரித்துக் கொண்டான் வான மண்டலக் கடம்பன்.

'மனிதனுக்குத்தான் எத்தகைய ஆணவம்! தான் மடிந்து ஒழிந்தாலும் தான் தோல்வி அடைந்து உயிர் இழந்தாலும், தன்னுடைய சாதனைகள் எல்லாம் அழியாமல் இருந்து தன் பெயரைச் சொல்லிக் கொண்டிருக்க வேண்டுமா? என்ன பைத்திய நினைப்பு இது! நாமே போன பிறகு இந்தக் கோட்டை இருந்தால் என்ன, ஒழிந்தால் என்ன? இந்தத் தீவின் செல்வங்கள் மட்டும் என்ன சாகா வரம் பெற்றவையா? தீவே அழியும்போது இந்தத் தீவில் உள்ள கலைகள் எல்லாம் அழிந்தால் என்ன? அழியட்டுமே!'

'தீவு என்ன ஆனாலும் ஆகட்டும். கலை என்ன ஆனாலும் ஆகட்டும். ஆனால் நான் கொடுத்த உறுதிமொழி, துளு நாட்டு மன்னனுக்கு நான் செய்து கொடுத்த உறுதி, அது மட்டுமாவது நிலைக்கட்டுமே!'

இப்படி எண்ணியதும் கடம்பன் சிரிக்கவில்லை. நேரே கன்னி மாடத்துக்கு விரைந்தான். சேரர்கள் வெள்ளைத் தீவுக்குள் நுழைந்து தங்கள் அழிவு வேலைகளைத் தொடங்கும் முன்னே, தனது கடைசி முயற்சியாகத் தனது இறுதிப் பணியாகத் தான் தனது உறுதிமொழியை நிறைவேற்றி விட வேண்டும் என்று தீர்மானித்தான் கடம்பன். தனது வாழ்வில் இதுவரை

## திருமண நன்றி அறிவிப்பு



எனது பேரனும் ஆர். விசுவநாதன் செட்டியார் குமாரன் சிரஞ்சீவி வி. ரவீந்திரநாத்துக்கும், பாலக்காடு ஆர். பலராம செட்டியார் குமாரத்தி சௌ. இந்திராவுக்கும் 28–5–67ல் கோவையில் எனது இல்லத்தில் நடந்த திருமண வைபவத்திற்கு நேரில் வருகை தந்தும், பரிசுகள் வழங்கியும், தபால் தந்தி மூலம் வாழ்த்துக்கள் அனுப்பிய அன்பர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பி. ஏ. ராஜு செட்டியார்,
கலா மாளிகை,
கோவை - 1.

- சித்ரா



சென்னை S. R. V. S. Ltd., ஸ்தாபனத்தைச் சேர்ந்த ஸ்ரீ A. குருமூர்த்தி அவர்கள் குமாரத்தி சௌ. லலிதா, B. Sc.,க்கும், தஞ்சை ஜில்லா, எடமணல் ஸ்ரீ E. S. ஸ்ரீநிவாச அய்யர் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி E. S. ராமகிருஷ்ணன், B. Sc., B. Tech., அவர்களுக்கும் சென்னையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!

# ஸைரப்பர்
# உறுப்புகள்

பியட் 1100, ஹிந்துஸ்தான் அம்பாஸிடர்/லாண்ட் மாஸ்டர் கார்களுக்கும், பார்கோ, அசோக் லேலாண்ட் பஸ்/லாரிகளுக்கும், உகந்த ரப்பர் உறுப்புகள் தனித் தனியாகவும் ஒன்று சேர்ந்த உறுப்புகளுடனும் விநியோகிக்கப்படுகின்றன.



செயற்கை ரப்பரிலிருந்து உருவாக்கப்பட்ட ஸைரப்பர் உறுப்புகள் நீடித்து உழைக்கும்.






**சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்**

இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், ரப்பர் யூனிட்,
மதுரை-7

s-3961




தம்முடைய சட்டை, கால் சட்டை, பூட்ஸ் இவைகளைக் கழற்றி ஒரு நண்பனிடம் கொடுத்துவிட்டு ஓர் அறைக்குள் இருந்து கொண்டு நாவல்கள் எழுதுவாராம் அலெக்ஸாந்தர் டூமாஸ். எழுதுவதை நிறுத்திவிட்டு வெளியே எழுந்து போய் விடாமல் இருப்பதற்குத்தான் இந்த ஏற்பாடு. இம்மாதிரி இவர் 277 புத்தகங்கள் எழுதிக் குவித்திருக்கிறார்.

''மௌன ஒளி'' — 'முத்து'

---

தனக்கு நண்பனாகவும், துணைவனாகவும், ஊக்கமும் உதவியும் தரும் மன்னனாகவும் திகழ்ந்த துளு நாட்டு மன்னன் நன்னனுக்குத் தான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றிவிட்டால், பிறகு மரணத்தை நிம்மதியோடு எதிர்கொள்ளலாம் என்று தீர்மானித்தான் வானமண்டலக் கடம்பன்.

ஆம்; பல ஆண்டுகளுக்கு முன்பு கொடுத்த உறுதிமொழி அது! நீலவல்லி அப்போது சிறு குழந்தை. கடல் மீது வந்த மரக்கலத்திலே கைப்பற்றி வந்த அரச மகவல்லவா அது!

நிலவு பழுத்த ஒரு கனியாக வந்த குழந்தை, நாளாக நாளாக வளர்பிறை போல் வளர்ந்து நிலவு தவழும் சிறுமியாக அரண்மனையிலே காட்சி தந்து கொண்டிருந்தாள்! அப்போது ஒரு நாள் வெள்ளைத் தீவு அரண்மனைக்குத் துளு நாட்டு வேந்தன், நன்னன், அரச விருந்தினனாக வந்தான். அந்த வேந்தனிடம், தனக்கு நீண்ட நெடுநாள் நண்பனாக விளங்கும் மன்னனிடம், தன்னுடைய வளர்ப்பு மகளைக் காட்டித் தனது உவகையை வெளியிட்டான் வானமண்டலக் கடம்பன்.

''ஏதோ ஒரு பாச உணர்ச்சியில் இந்தக் குழந்தையை வளர்த்து வருகிறேன். நாளாக நாளாக இந்த வெண்ணிலவுப் பெண்ணுக்கு இந்த வெள்ளைத் தீவையே உடைமையாக்கி விடலாம் என்று எண்ணுகிறேன்!'' என்றான், கடம்பன் நன்னனை நோக்கி.

இந்தச் சொற்களைக் கேட்டுக் கொண்டே அருகில் வந்தான் மிஞிலி, துளுநாட்டுத் தானைத் தலைவன்.

''கடம்ப மன்னரே, உம்முடைய இந்த அன்பு இப்படியே இருக்குமானால், இந்தப் பெண் இந்த வெள்ளைத் தீவின் அரசியாவதில் தடை என்ன இருக்கிறது? இளவரசிக்கு ஏற்ற இளவரசனை நாடி அதிகத் தொலை போக வேண்டாம் நீர். என்ன மன்னர் பெருமானே!'' என்று நன்னனை நோக்கினான் மிஞிலி.

''அதில் என்ன சந்தேகம்? வெள்ளைத் தீவின் இளவரசிக்கு ஏற்ற இளவரசன் துளு நாட்டு இளவரசன் இளநன்னன்தான்!''

நன்னன் இவ்வாறு சொன்னதும் மிஞிலி ஆரவாரம் செய்து களிப்புக் கூத்தாடினான். சொன்னான்:

''கடம்ப மன்னரே! இப்படிப்பட்ட ஒரு திருமண உறவு மட்டும் நமக்குள் நிகழ்ந்துவிடுமேயானால், பிறகு இந்தக் கடல் சூழ்ந்த காசினி அனைத்தும், உங்கள் இளவரசிக்கும், எங்கள் இளவரசருக்கும் உடைமை யாகிவிடும் அல்லவோ? வழி வழியாக உள்ள இணைப்பு அல்லவா இது! ஆனால் ஒன்று...'' என்று குறும்புக் குரலிலே சொற்களை இழுத்தான் மிஞிலி.

'' 'ஆனால்' என்ன தானைத் தலைவரே?'' என்று துணுக்குற்றுக் கேட்டான் கடம்பன்.

''வளர்த்த மகளுக்கு நீங்கள் இந்த வெள்ளைத் தீவு அரசு முழுவதையும் கொடுத்துவிட்டால், நாளைக்கு உங்களுடைய உரிமை மகள், பெற்ற மகள், அல்லது பெற்ற மகனுக்கு என்ன மறுமொழி சொல்வீர்கள்?'' என்று சிரித்துக் கொண்டே நயமாகக் கேட்டான் மிஞிலி.

''தானைத் தலைவரே! நான் திருமணம் செய்துகொள்வதாக இருந்தால் தானே அந்த எண்ணத்துக்கே இடமுண்டு? உங்கள் துளு நாட்டு இளவரசர் எங்கள் வெண்ணிலவுப் பெண்ணுக்கு மணமகனாய் வருவதாயிருந்தால், வாழ்வில் நான் இனியும் திருமணமே செய்து கொள்ள மாட்டேன். இது உறுதி!'' என்றான் கடம்பன்.

மிஞிலி நன்னர் மன்னனைப் பார்த்தான், பொருள் பொதிந்த கண்களோடு.

''மன்னர் பெருமானே! தமிழகத்திலே செல்வமும் புகழும் மிக்க துளு நாடும், உலகச் செல்வங்களை யெல்லாம் ஒருமித்துச் செழித்த வெள்ளைத் தீவும் இதுவரை நட்பிலே உறவாகி வந்துள்ளன. இனிமேல் எதிர்காலத்தில் திருமண உறவும் கொள்ளுமேயானால், தமிழகத்தில் எந்த மன்னனும் நம்மை எதிர்க்க முடியாது. வேறு எந்த நாடும் நமக்கு ஈடாகாது. இது உறுதி!''

மிஞிலி இந்தச் சொற்களைக் கூறி முடித்ததும் நன்னன் சொல்லுவான்:

''கடம்ப மன்னரே! என்வரையில் இளநன்னன் இந்த அரண்மனைக்கு உரிய மணமகன். உம்முடைய மனமும் இசையுமானால், அழகு கொழிக்கும் உமது அரச மகள் எங்கள் அரண்மனைக்குரிய பட்டத்தரசி! என்ன சொல்லுகிறீர்கள்!''

வான மண்டலக் கடம்பன் இருக்கையிலிருந்து எழுந்தான்.

''நன்ன வேந்தனே! இதுவரை செல்வச் செருக்கிலே ஒரு விந்தைப் பொருளாக வளர்த்தேன் இந்தச் சிறுமியை! இனி மெய்யாகவே துளு நாட்டுக்குரிய அரச மகள் இவள் என்று கருதி, வெள்ளைத் தீவின் இளவரசிக்குரிய அத்தனை சிறப்புக்களோடும் இவளை வளர்ப்பேன். நம் இருவருடைய நட்பின் மீது ஆணையாகக் கூறுகிற உறுதிமொழி இது!''

இந்த உறுதிமொழியைக் கேட்டதும் நன்னன் எழுந்து வந்து கடம்பனைத் தழுவிக் கொண்டான். அரசர்களைக் கொடுமைப் படுத்துகிற நன்னனும், மேனாட்டு அரச வணிகர்களைக் கொடுமைப்படுத்துகிற கடம்பனும், இரும்பும் இரும்பும் உருகி ஒன்றானது போல் உறவு என்ற உலையில் உருகி நின்றார்கள்! அந்த இணைப்பை இறுக்கி அதற்கு உருவம் கொடுத்தான் மிஞிலி. எப்படியோ தொடங்கிய பேச்சு மையமாகி ஒரு பெரிய உறுதிமொழியிலே வந்து நின்றது.

சேரர்கள் ஒரே ஆத்திரத்தோடு படையெடுத்து வருகிறார்கள் என்றதும், கடம்பன் நினைத்தான், தான் மாண்டு மடிந்து போனாலும் அந்தத் தீவே அழிந்து ஒழிந்து விட்டாலும், தனக்கு இத்தனை காலமும் நெருங்கிய நண்பனாகவும் ஆதரவாளனாகவும் விளங்கி வருகிற நன்னனுக்குத் தான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றி விட்டால், அது ஒன்றே தனக்குப் பிறகு தனது புகழை வழி வழியாக நிலைநாட்டி நிற்குமே! இவ்வாறு எண்ணிக் கன்னிமாடத்தை நோக்கி நடந்தான் கடம்பன்!

நடக்கும்போதே வான மண்டலக் கடம்பன் மறுபடியும் சிரித்தான். 'மாண்டு மடியப் போகிற நேரத்தில் புகழைப் பற்றி இப்படி ஒரு கவலையா? தான் மறைந்து போன பிறகு தன் பெயரை இந்த உலகத்தார் சொல்லிக் கொண்டிருக்க வேண்டும் என்று ஓர் ஆசையா? புகழாவது ஒன்றாவது! உறுதிமொழியாவது நிலைத்து நிற்கவாவது! நாமே அழிந்து ஒழிந்து போகும்போது நம்முடைய உறுதிமொழி என்ன ஆனால்தான் என்ன?' கன்னிமாடத்துக்குப் போகும்போதே இப்படி ஒரு கொதிப்பு!

கடம்பன் 'இடிஇடி' என்று உரக்கச் சிரித்தான். எங்கோ என்றோ யாருக்கோ கொடுத்த உறுதிமொழி. எங்கோ என்றோ யாருக்கோ உரிய ஒரு பெண்ணை, எங்கோ, என்றோ யாரிடமிருந்தோ கைப்பற்றி வந்து வளர்த்து, இப்போது எங்கோ யாருக்கோ எப்படியோ திருமணம் செய்து கொடுப்பது என்று ஒரு உறுதிமொழியாம்! அதை நிறைவேற்றுவதாம்!

வெறி பிடித்த பைத்தியம் போல மறுபடியும் மறுபடியும் சிரித்தான் கடம்பன். சிரித்துக்கொண்டே ஓடினான்!

'நீலவல்லி! அரச மகள்! வெறும் கொள்ளைப் பொருள் இல்லை அவள்! இறகு முளைத்த பறவை. ஒரு முறை இறகுகளை விரித்துப் பறந்து சென்ற பறவை. மீண்டும் பிடித்து வந்து எவ்வகையிலும், அவனுக்கு எத்தகைய சம்பந்தமும் இல்லாத ஏதோ ஒரு துளு நாட்டு இளவரசனுக்காக அவளை அன்போடு பேணி வளர்த்தேனா? துளு நாட்டு அரண்மனையிலே அவளை ஒப்படைக்க வேண்டும் என்று கருதியல்லவா வளர்த்தேன்! அவள் தப்பி ஓட முனைந்ததையும் பொருட்படுத்தாமல், அன்பு செலுத்தி வளர்த்தேன்,— எதற்காக? என்னுடைய உறுதிமொழிக்காக! என்னுடைய அரசியற் காரணத்துக்காக! என்னுடைய அரச உறவை இன்னும் வலிமைப்படுத்திக் கொள்வதற்காக! இப்படியும் ஓர் ஆணவமா! இப்படியும் ஒரு செருக்கா!'

கடம்பன் மறுபடியும் சிரித்தான். பிறகு கண்களைத் துடைத்து விட்டுக் கொண்டான். மேலும் ஓடினான்.

''தீவுக்கு வெளியே போரின் வேகம் சூழ்கிறது. இங்கே நான் சிரித்துக் கொண்டிருக்கிறேன். மகளே, நான் வளர்த்த செல்வமே! உன்னை இந்தத் தருணத்திலும் விலை பேசுகிறேனா நான்?''

இப்படித் தனக்குள் சொல்லும் போதே வான மண்டலக் கடம்பன் உடல் பதறினான். ஏதோ ஒரு வேகம் அவனை உந்தித் தள்ளியது. அப்படியே நேரே கன்னி மாடத்துக்குள் ஓடி வந்தான் கடம்பன்.

''வல்லி! வல்லி! என் செல்வமே!'' என்று அழைத்துக் கொண்டே கன்னி மாடத்துக்குள் ஓடிய மன்னனைக் கண்டு சேடியர்கள் எல்லாரும் திகைத்தனர். அவனுடைய குரலிலே அவனையும் மீறிய ஒரு பாசம், அவன் இதயத்தின் துடிப்பாக ஒலித்தது. அது அந்தக்




# லைப்பாய்

## இருக்குமிடம்: அதுவே...
## ஆரோக்கியம் இருக்குமிடம்

லைப்பாய் ஸ்நானம் - உற்சாகப் பெருக்கு. உல்லாச ஊற்று..
ஒவ்வொரு குளியலும் உணர்த்தும்: நல்ல சோப்புக்குரிய நன்மைகள்
யாவும் பெறலாம், அதற்கு மேலும் பெறலாம் ஆரோக்கியமுடன்.

**அழுக்கிலுள்ள கிருமிகளைக் கழுவிக் களைவது லைப்பாய்**

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

லின்டாஸ்-L.51-540 TM

கன்னிமாடம் முழுவதும் எதிரொலி செய்தது.

"மரணம் நெருங்குகிறது எனக்கு. இப்போதுதான் மெய்யான பாசமும் பிறக்கிறது!" என்றான் கடம்பன் நீலவல்லியைப் பார்த்து.

"கண்ணே, உயிர்வாழப் போகிறேன் என்று உறுதியாக இருந்தவரையில் என்னுடைய அரச உறவை வலிமைப் படுத்துவதிலேயே குறியாக இருந்தேன். இப்போது சாகப்போகிறேன் என்ற உறுதி வந்ததும், உன்னுடைய உறவை உனக்காகவே எண்ணத் தொடங்குகிறேன்! வாழ்ந்த வரையில் உன்னை இன்னொரு உறவுக்காக வளர்த்தேன். சாகப் போகிற வேளையில் உன்னை மகள் என்ற உறவுக்காக வளர்க்கத் துடிக்கிறேன். ஆனால் மரணம் கடல் மீது படையெடுத்து வந்து கொண்டிருக்கிறது. அரசியாகப் பார்த்த உன்னை, மகளாகப் பார்க்கத் துடிக்கும் போது சேரர் படை என்னைச் சாடுகிறது. நான் என்ன செய்வேன்!"

கடம்பனுடைய இந்தச் சொற்களைக் கேட்டு நீலவல்லி பதறினாள். திகைப்பும் குழப்பமும் மேலிட்டவளாக மன்னனையே பார்த்தாள் நீலவல்லி.

ஃ ஃ ஃ



வேலவன் கோதைக்கு இந்த நிகழ்ச்சிகளை யெல்லாம் சொல்லிவந்த நீலவல்லி மீண்டும் கண்ணீர் வடித்தாள்.

"அன்பே, சேரர்களால் எனக்கு ஒரு தீங்கும் நேராது என்றும், சேரர்களோடு ஒற்றுமை கொண்டு வாழலாம் என்றும், மணிமாலை ஏதேதோ எடுத்துச் சொன்னாள் கடம்பனிடம். அவர் எந்தச் சொல்லையும் செவியிலே வாங்கிக்கொள்ளவில்லை. துறை நாட்டு இளவரசனுக்கு என் உள்ளத்திலே இடமில்லை என்பதை அறிந்ததும், அவர் என்னிடம் என்ன சொன்னார் தெரியுமா?

'மகளே! வளர்த்த பாசமோ அல்லது மரணத் தருவாயில் ஏற்படுகிற ஞானமோ எதுவானாலும் சரி, நீயும் மணிமாலையும் போரின் கடுமைகளிலிருந்து தப்பிச் சென்றுவிடுங்கள். மூன்று காலமும் உணர்ந்த முனிவர்களைக் கொடுமைப் படுத்திய தீவினை என்னைச் சூழ்ந்து கொண்டது. இதற்குக் கழுவாய் வேறில்லை. நான் உங்களை மிகுந்த பாதுகாவலோடு செவ்வந்தியடிகளிடம் அனுப்புகிறேன். எந்தப் போரிலும் உங்களுக்கு அடைக்கலம் தரவல்ல புகலிடம், துறவிகளின் பெருந்துருத்தித் தீவு ஒன்றுதான். இந்தப் போர் என்னோடு நிற்கப் போவதில்லை. துறை நாட்டு நன்னனை அழித்து ஒழித்து விட்டுத்தான் சேர மன்னன் அரச இருக்கையிலே அமருவான். அதுவரை நன்னர்கள் தீர்கிறவரை, நீங்கள் எந்தத் துன்பமும் இல்லாமல் வாழக் கூடிய ஒரே இடம் பெருந்துருத்தித் தீவு தான்! இல்லையென்றால் நீங்கள் வேறு எங்கே இருந்தாலும், துறை நாட்டு நன்னன் உங்களைக் கண்டு பிடித்துப் பின்தொடர்வான்! மீறிலியோ, அந்த வஞ்சகனோ, என் மகளை விடமாட்டான். அவனுடைய சூழ்ச்சி வலையிலிருந்து நீங்கள் தப்ப முடியாது. நீலவல்லி, நான் சொல்வதைக் கேளம்மா. உள்ளத்தில் இடம் தராத ஓர் இளவரசனுக்கு, வாழ்வில் நீ இடம் தரவேண்டும் என்று உன்னை வற்புறுத்தி என் உறுதிமொழியை நிறைவேற்ற இப்போது என் மனம் மறுக்கிறது. சற்று முன் இருந்த மனநிலை வேறு; இப்போது மரணத்தின் வாயிலிலே எல்லாம் மாறுகிறது! என் உறுதிமொழியை நிறைவேற்றி முடிவதைவிட, உன் எண்ணத்தை, உன் ஆசையை நிறைவேற்றி முடிவதே மேலாகும் என்று இந்த விநாடி நினைக்கிறேன். இந்த எண்ணமும் மாறிவிடக் கூடாது. அதற்கு முன்பே நீங்கள் புறப்படுங்கள். காலதாமதம் தீதாக முடியும். புறப்படுங்கள், புறப்படுங்கள்!"

கடம்பனுடைய உடம்பு பதறியது. எக்காலத்திலும் துளங்காத கையும் காலும் ஆடுவது கண்டு கலங்கினேன். அன்பே, உங்களிடம் அந்த உணர்ச்சியை வெளியிடுவதில் என்ன தவறு? ஒரு மகளின் பாசம் என்றால் அது என்ன என்பதை அப்போதுதான் என் வாழ்வில் முதன் முதலாக உணர்ந்தேன். தந்தையின் சொல்லுக்கு மறு சொல் இன்றி, உள்ளத்தை எல்லாம் கல்லாக்கிக் கொண்டு நானும் மணிமாலையும் யவனப்பகடியும் சில வீரர்களுமாகப் புறப்பட்டு, இரவோடு இரவாகச் செவ்வந்தி அடிகளிடம் வந்து சேர்ந்தோம்!"

இப்படி நீலவல்லி சொல்லிக் கொண்டிருக்கும்போதே மணிமாலை பதறிய வாறு நிலாமுற்றத்துக்கு ஓடிவந்தாள்.

"கடல் மீது ஒரு பெரிய அரச மரக்கலம் தெரிகிறது. பவளத் தீவை நோக்கி வருகிறது!" என்றாள் மணிமாலை.

(தொடரும்)

# ஒவ்வொரு துளியிலும் ஊக்கம் துள்ளும்

மற்றெந்த உணவு பானத்தையும்விட அதிக மால்ட் அடங்கியது ஓவல்டின்! மால்ட் என்பது சக்தி தரும், இயற்கையின் ஒப்பற்ற ஊட்டப் பொருள்களில் ஒன்றாகும். 1932 முதல் எல்லா ஒலிம்பிக் ஆட்ட விழாக்களிலும் அங்கீகாரம் பெற்ற ஒரே ஒரு பானமாக ஓவல்டின் விளங்குவதில் வியப்பில்லை.

அதிக மால்ட் தவிர, பால், வைட்டமின்கள், வலிமையூட்டும் இதர சத்துக்கள் யாவும் அடங்கியது ஓவல்டின்.

அதிகத் தெம்புதரும்
மால்ட் அடங்கியது
ஓவல்டின்

உழைப்பாளிகளுக்கும், வளரும் குழந்தைகளுக்கும் இன்றியமையாத, உன்னதமான உணவுபானம் ஓவல்டின்.

ஒவ்வொரு நாளும் அருந்துங்கள் ஓவல்டின்.

ஒவ்வொரு துளியிலும் ஊக்கத் துள்ளலை அளிப்பது ஓவல்டின்.




## ஓவல்டின்

ஓவல்டினைப் பாரதத்தில், ஜகத்ஜித் டிஸ்டிலிங் & அலைட் இண்டஸ்ட்ரீஸ் லிட்., நிறுவனம், லண்டனிலுள்ள ஏ. வாண்டர் லிமிடெடின் லைசென்ஸ் பெற்றுத் தயாரிக்கிறது.

ASPIDAB TAM




# மாற்றாந் தாய்



ர. வேங்கடரத்தினம்

**என்** தந்தை கழுத்தில் சுற்றியிருந்த அங்கவஸ்திரத்தைக் கழற்றிக் கொண்டே உள்ளே நுழைந்தார். அவரது முகத்தை நான் உள்ளேயிருந்தபடியே கவனித்தேன். சென்ற காரியம் வெற்றி ஆகும் போலத் தோன்றவில்லை. கைக் காரியத்தை அப்படியே போட்டுவிட்டு அம்மா ஓடிச் சென்றாள் கிணற்றடியிலிருந்து. அப்பா உட்கார்ந்து விட்டார்.

"என்ன ஆயிற்று? வந்தவுடன் அப்படியே உட்கார்ந்து விட்டீர்களே?" அம்மாவுக்கு ஆவல் பொறுக்கவில்லை. அம்மாக்களுக்கே தள்ளிப் போய்க் கொண்டிருக்கும் பெண்ணின் விவாக விஷயம் எனில், பொறுக்காது! "எல்லாம் சொல்கிறேன். சொல்லாமலா இருந்துவிடப் போகிறேன்?" என்று தந்தை தொடங்கி, தொடர்ந்தார்—பையன் தங்கமானவன். வேறு எந்த ஆசையும் அவனுக்குக் கிடையாது. கைக் குழந்தையை எடுத்து வளர்க்க ஒரு பெண் வேண்டும். அவனுக்கு வேண்டியது இவ்வளவுதான்."

"பையனைக் கண்டு பேசினீர்களா?"— அம்மாவின் துடிப்பு நிறைந்த இக்கேள்விக்கு அவர், "பேசாமல் வருவேனா?" என்றார்.

"குழந்தைக்கு எவ்வளவு வயசு ஆகிறதாம்?" — அம்மாவின் சந்தேகம் இயல்பான ஓர் 'அம்மா'வுக்கு வரவேண்டியதுதான்.

"வயசாவது? போன மூன்றாம் தேதி இராத்திரி ஜெனரல் ஆஸ்பத்திரியிலே பிறந்திருக்கிறது என்றும், கணக்குப் போட்டுப் பார்த்துக் கொண்டேன்."

"இருபத்தெட்டு நாள் ஆகிறதென்று சொல்லுங்கள்."

"ஆமாம்."

நான் பேச்சைக் கூர்ந்து கேட்கலானேன்.

"பெற்றுவிட்டு உடனே போய் விட்டாளாக்கும் தாயார்க்காரி?"

"ஆமாம்."

ஓர் இரண்டு நிமிட அமைதி. மீண்டும் அம்மாவின் கேள்வி: "குழந்தையைக் காப்பாற்ற ஓர் ஆள் தேவை உடனே இப்போது. அப்படித்தானே?"

"நம் கல்யாணிக்கு இஷ்டம் என்றும், எனக்கென்னவோ இந்த இடம் சரியென்று படுகிறது."

"அவள் மட்டும் என்ன சொல்லிவிடப் போகிறாள்? சம்மதம் என்று தலையை ஆட்டி விடுவாள்."

"உனக்கு?"

"இளையாள் என்ற ஒரு குறையைத் தவிர எனக்கு மட்டும் என்ன? பையனுக்கும்தான் அப்படி ஒன்றும் அதிகமாக வயசு ஆகிவிடவில்லையே. இருபத்தொன்பதுதான் ஆயிற்று என்றார் உங்கள் சிநேகிதர்?"

"அதுதான் நானும் பார்க்கிறேன். பேசாமல் காரியத்தை முடித்து விடலாம் என்று எனக்குப் படுகிறது."

நான் இந்த உரையாடலைக் கேட்டுக் கொண்டிருந்தபோதே என் மனத்தில் உறுதி செய்து கொண்டு விட்டேன். எவ்வளவோ இளையாள் கதைகள் மாற்றாந்தாய் நாவல்கள் எல்லாம் படித்தவள்தானே நான்? சிற்றன்னை என்ற எண்ணத்துக்குச் சிறிதும் இடம் இராதபடி அந்தக் குழந்தைக்குப் பொறுப்பேற்றுக் கொண்டு, வளர்த்துச் சரித்திரம் காணாப் புதுமையைக் கண்ணெதிரே உலகுக்கு நடத்திக் காண்பிக்க வேண்டும் எனத் தீர்மானித்தேன்.

குழந்தைக்கு — கல்யாணம் எனக்கு நடக்கும்போது — வயது ஒன்றரை மாதம்தான் ஆகியது என்பதால், சிற்றன்னை என்ற எண்ணம் தலைகாட்ட முடியாதவாறு வளர்க்கும் திட்டத்தில் நான் தீவிரமாக முனைந்தேன். அவரும் நல்லவர். 'கல்யாணி, கல்யாணி' என்று வளைய வளைய வலம் வந்தார் என்னையே. குழந்தைக்கு வயது ஓர் ஆண்டு ஆகும்போது எனக்கும் ஓர் உயிர் பிறந்து விட்டது. சவிதா பிறந்ததனால் சரயுவை நான் நட்டாற்றில் நிறுத்தி வைத்துவிடவில்லை. சரயுவும் அம்மா அம்மா என்று என்னைக் கொஞ்சிக் கூப்பிட்டுச் சொந்தப் பெண்ணுக்கு மேல் ஒட்டிப் பழகினாள்.

ஒன்று மட்டும் அவரிடம் சொல்லி, அவருக்கே புரியவைத்து நடத்திக் கொண்டேன். அது என்ன? சரயுவுக்கு இரண்டு வயது ஆகும்வரையிலும் சுவரில் தொங்கிய அவ

ளுடைய அன்னையின் படத்தை அகற்றி விட்டு மறு காரியம் பார்த்தேன். முதலில் எனது கோரிக்கையை அவர்கூடச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை.

கடைசியில் இசைந்து விட்டார்; அந்தப் படம் உள்ளே புதைபுண்டது. கூடத்தில் நானும் அவரும் மாலையும் கழுத்துமாக நிற்கிற திருமணப் படம் மட்டுமே தொங்கலாயிற்று.

நானும் சவிதாவும் விளையாடிக் கொண்டிருந்தோம். பக்கத்து வீட்டு ஸ்ரீமதி வந்தாள். அப்போது தீபாவளிக்கு இருபது நாள்தான் இருந்தது. எனவே நாங்கள் தீபாவளிக்கு அவரவர் வீட்டில் என்ன துணி மணிகள் எடுக்கப் போகிறார்கள் என்பதைப் பற்றிப் பேசலானோம்.

"எனக்குக் கதர்ப் பட்டுத் துணி எடுத்தாகிற்று" என்றாள் ஸ்ரீமதி.

"நிஜமாகவா?" என்று சவிதா வாயைப் பிளந்தாள். நானும் ஆச்சரியத்தில் மூழ்கிப் போனேன். "வேண்டுமானால் வந்து பாரேன், சரயு" என்றாள் அவள் என்னைப் பார்த்து.

"நல்ல நீல நிறப் பாவாடை. அதில் கறுப்புக் கரை போட்டு, அதிலே ஜரிகை வேலைப்பாடு வேறே" என்று அவள் வர்ணிக்கத் தொடங்கினாள்.

"நாமும் போய்க் கேட்போமடி" என்று சவிதா என்னைக் கிளப்பி விட்டாள். இரண்டு பேருமாக ஸ்ரீமதியை அப்படியே விட்டுவிட்டு உள்ளே ஓடினோம்.

"அம்மா... அம்மா! பக்கத்து வீட்டு ஸ்ரீமதிக்குப் பட்டுப் பாவாடை வாங்கியிருக்கிறார்கள். அது மாதிரி எங்களுக்கும் வாங்கச் சொல்லம்மா" என்று சவிதாவும் நானும் அம்மாவின் முந்தானையைப் பற்றிக் கொண்டோம். அம்மா வழக்கம் போல் "இரட்டை நாயனம் ஆரம்பித்தாயிற்று இரண்டு பேரும்?" என்று சிரித்துக்கொண்டே அப்பாவிடம் சென்றாள். கதர்ப் பட்டு, விலைவாசிகளைப் பற்றி இரண்டு பேரும் பேசிவிட்டுக் கடைசியில் எங்களைக் கூப்பிட்டுச் சொன்னார்கள்.

"ஒரு பாவாடை நாற்பத்தைந்து ரூபாய் ஆகிறதாம். யாராவது ஒருத்திக்குத்தான் வாங்க முடியும். யாருக்கு வேண்டும், சொல்லுங்கள்" என்று அம்மா அறிவித்தது தான் தாமதம்; நான் உடனே அம்மாவின் புடவைத் தலைப்பைப் பற்றிக் கொண்டு, "எனக்கம்மா, எனக்கம்மா" என்று அழத் தொடங்கினேன். சவிதா விடுவாளா? "போ உனக்குத்தானா பட்டுப் பாவாடை? எனக்கு மட்டும் வேண்டாமோ?" என்றாள். இதற்குள், அம்மா வேறோர் ஆசையும் காட்டினாள். "இந்த வருஷம் சமர்த்தாய், சாதாரணப் பாவாடை வாங்கிக் கொண்டால், அவளுக்கு அடுத்த தீபாவளிக்கு உயர்ந்த வெல்வெட் பாவாடை கட்டாயம் உண்டு."

"ஆமாம், இந்தத் தீபாவளிக்கு இல்லாமல் அடுத்த தீபாவளிக்கு யாருக்கு வேண்டும்?"—இரண்டு பேருமே சொன்னோம்.

"சரி, திரும்பவும் இரட்டை நாயனம் ஆரம்பித்து விட்டீர்களா?" என்று சொல்லி விட்டுப் போன அம்மாவிடம் என் கட்சி தான் ஜயித்தது. "இந்த வருஷம் சரயுவுக்குத்தான் பட்டுப் பாவாடை" என்று அம்மா சொன்னாளே, பார்க்க வேண்டும்! எனக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. அம்மாவைப் போய் அப்படியே கட்டிக் கொண்டு விட்டேன். வெகுநேரம் வரை சவிதா அன்றைக்கு அம்மாவிடம் கூடப் பேசவில்லை.

வகுப்பிலே எங்கள் டீச்சர் சுற்றுப் பிரயாணத்தைப் பற்றி அறிவித்ததுமே, நான் நிச்சயம் பண்ணி விட்டேன். வீட்டிலே அம்மாவைக் கேட்டு எப்படியாவது அப்பாவிடமிருந்து பணம் வாங்கி, மகாபலிபுரமெல்லாம் போய்விட்டு வரவேண்டும்.

தீபாவளிப் பாவாடை விஷயத்தில்தான் அம்மா என்னை ஏமாற்றி விட்டாள். சுற்றுப் பிரயாணத்தை எப்படியும் கைதவற விடக் கூடாது என்ற தீர்மானத்தோடு நான் பள்ளிக்கூடம் விட்டதும் விடாததுமாக ஓடினேன். வீட்டுக்குப் போனதும் முதல் காரியமாக அம்மாவிடம் சொல்லிப் பணம் வாங்க வேண்டும் என்று எனக்கு ஆசை.

சரயு எந்த வழியில்தான் வீட்டுக்குப் போனாளோ தெரியவில்லை. அவள் எனக்கு முன்னால் வீட்டிலிருந்தாள். நான் வீட்டில் கால் எடுத்து வைக்கும்போது அவளிடம் அம்மா கேட்டுக் கொண்டிருந்தாள், 'எத்தனை ரூபாய் பணம் கொடுக்க வேண்டும்?' என்று. இந்தத் தடவையும் சரயுவுக்குத்தான் அதிர்ஷ்டம் அடிக்குமோ என்று எனக்கு ஒரே வருத்தம். "நான்தான் அம்மா மகாபலிபுரத்துக்குப் போகப் போகிறேன். பாவாடை மாதிரி இதிலேயும் என்னை நீ ஏமாற்றலாம் என்று நினைக்காதே."

சரயு விடுவாளா? "பாவாடைக்கும் இதுக்கும் என்ன சம்பந்தம்? நான் மகாபலிபுரம் பார்த்ததேயில்லை. நான் போய்த்தான் தீருவேன்!"

"நான் மட்டும் பார்த்திருக்கிறேனா? நானும்தான் போயாக வேண்டும்."

அம்மா இடையில், "ஏன்? இரண்டு பேரையுமே போகச் சொன்னால்?" என்று கேட்க, நாங்கள் இருவரும் "ரொம்பச் சரியம்மா" என்று தன்னையறியாமல் உரக்கக் கத்திவிட்டோம்.

இதற்குள் அப்பா வந்து விட்டார் காமிரா உள்ளிலிருந்து. "நீபாட்டில் ஏதாவது வாக்குக் கொடுத்துத் தொலைக்காதே. ஆளுக்கு அஞ்சு ரூபாய் கொடுக்க இப்ப இங்கே ஒன்றும் கொட்டிக் கிடக்கவில்லை."

"அப்படியானால் நான் போகிறேனப்பா!" என்று நான் அழ மாட்டாக் குறையாகக் கெஞ்சினேன்.

"நான்தான் போவேன்" என்றாள் சரயு.

"அவள்தான் பட்டுப் பாவாடை வாங்கிக் கொண்டு விட்டாளே!"

"நீ அடுத்த ஆண்டு வெல்வெட் பாவாடை வாங்கிக் கொள்ளப் போகிறாயே, அப்போது என்னவாம்?"

"எனக்கு ஒன்றும் வேண்டாம், வெல்வெட் பாவாடை.."

அப்பா கூடச் சொல்லிப் பார்த்தார்.. "சரயு, சமர்த்தோ இல்லியோ நீ! இந்தத்

# அவேதனில் அப்படி என்ன இருக்கிறது? அற்புத 'எபேப்'



தலைவலி, நோவுகள், ஜலதோஷம், ஃப்ளு முதலியவற்றிலிருந்து உங்களுக்கு, மேலும் துரிதமான, தீமையற்ற, நிச்சயமான நிவாரணம் அளிப்பதற்கு தான்!




அற்புத 'எபேப்' அடங்கிய ஸ்க்விப்

## அவேதன்®

சில நிமிடங்களுக்குள் செயல் புரிந்து, மணிக் கணக்காகப் பயனளிக்கிறது!

சாப்பிடும் அளவு: 1–2 டேப்லெட்டுகள்

பின் வரும் உபாதைகளுக்கு அவேதன் சாப்பிடுங்கள் : தலைவலி, பல்வலி, தசைநார்களில் வலி, ஜலதோஷம், ஃப்ளு, பெண்களின் அசௌகரியமான காலங்கள், மற்றும் இதர வலிகள்

SQUIBB®

ஸாராபாய் கெமிகல்ஸ்

® இ.ஆர். ஸ்க்விப் அண்ட் ஸன்ஸ் இன்கார்பரேட்டடின் ரிஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்காகும். சாராபாய் பிரேம்சந்த் பிரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

Shilpi SC 40A/66 TAM

தடவை சவிதா போய்விட்டு வரட்டும் மகாபலிபுரமெல்லாம்.''

சரயு விட்டுக் கொடுக்கவேயில்லை. அம்மா அப்பாவைத் தனியாக அழைத்துக்கொண்டு போனாள். 'அப்பா, ஊரும், வேண்டாம்' என்று ஏதோ அம்மாவிடம் சொன்னதுகூட என் காதில் விழுந்தது. கடைசியில் இந்த அம்மா வந்துதான் கெடுத்தாள். அம்மாவுக்கே எப்போதும் சரயுவிடம்தான் ரொம்பப் பிரியம். ''இந்தத் தரம் சரயு போய்விட்டு வரட்டும். என் கண்ணோ இல்லியோ நீ?'' என்று கேட்டுக் கொண்டே அம்மா என் தாவாக்கட்டையைப் பிடிக்க வந்தாள். நான் பேசவேயில்லை. இரண்டு நாட்கள் வரை அம்மாகூட!

குழந்தைகள் இரண்டும் கூடத்தில் விளையாடிக் கொண்டிருந்தன. வாசலுக்குப் போய் விளையாடுங்கள் என்று இரண்டு மூன்று தரம் சொல்லிப் பார்த்து விட்டு நான் என் கைக் காரியத்தில் ஆழ்ந்தேன். ''மெதுவாய்த்தானம்மா பந்தைப் போட்டுப் பிடிக்கிறோம். இந்த விளையாட்டுக்குக் கூட வெளியே போக வேண்டுமா?'' என்று சரயு தான் கேட்டாள். நானும் பேசாதிருந்து விட்டேன்.

அவர்கூட வந்தாயிற்று. கோட்டு, சட்டையை யெல்லாம் கழற்றி மாட்டிக் கொண்டிருந்தார். திடீரென்று கூடத்தில் என்னவோ கண்ணாடிச் சாமான் உடைந்து தெறித்து விழுந்தாற்போல் சத்தம் கேட்டது. நான் ஒரு கணம் திடுக்குற்றுப் போனேன். அங்கே கூடத்தில் போய்ப் பார்த்தால், சாந்தி முகூர்த்தத்துக்கு அப்பா வாங்கிக் கொடுத்த நிலைக்கண்ணாடி. அப்படியே சுக்கல் நூறாக உடைந்திருக்கிறது. இந்த மாதிரியான சமயங்களில் அவருக்குச் சரியான கோபம் வந்துவிடும்.

குழந்தைகள் இரண்டும் பயத்தில் நடுங்கிப் போய்விட்டன. அவர் ஆத்திரத்தோடு வந்தவர் சவிதாவைக் காதிலும் பற்றி இழுத்துக் கன்னத்தில் பளார் பளார் என்று இழுத்துவிட்டார். முகம் சிவந்து துடித்தது. இதற்குள் சரயு தப்பிவிட்டாள். அவளைத் தூரத்தில் சென்றவர் இரண்டே எட்டில் பிடித்துவிட்டார். கட்டாயம் அவளைக் கண் காது தெரியாமல் அடித்து விடுவார் என்று தோன்றியது. அப்பாவின் கோபத்தைப் பார்த்தே சரயு பயந்து போனாள்.

இடது கரத்தினால் அவளது கழுத்தைப் பிடித்து நிறுத்திக் கொண்டார். நான் ஓட்டமாக ஓடிச் சென்று குறுக்கே நின்றேன். பயந்த வண்ணம் சரயு என்னையே பார்த்தாள். நான் அவளை அவரது முரட்டுப் பிடியிலிருந்து தப்புவிக்க முயன்றேன். அவர் கையைத் தளர்த்தவில்லை. சரயுவின் பார்வை என்னை நிலைகுலையச் செய்தது. கண் சாடையினால் அவரை எச்சரித்தேன் — விடப் போகிறீர்களா இல்லையா என்று.

அவர் நொடிப் போதில் அப்பால் நகர்ந்து விட்டார். சரயு ஒரு அடிகூட வாங்காது தப்பிவிட்டாள். அவளது உடல் நடுக்கம் நிற்பதற்கு மட்டும் ஒரு நாழிகை ஆகியது.

□ □ □ □ □ □ □ □ □ □ □

''என் உதவியில்லாமல் என் கணவரால் ஒரு காரியமும் செய்ய முடியாது. பாரேன், அவர் ஸ்லாக்காகட்டும் என் புடவை ஜாக்கெட் ஆகட்டும், குழந்தைகள் சட்டைகளாகட்டும்....




ஏதாவது கிழிசல் தைக்க வேண்டும் என்றால் நான்தான் ஊசியில் நூல் கோத்துக் கொடுக்க வேண்டியிருக்கிறது.''

''முத்து'' — (பேஜண்ட்)

□ □ □ □ □ □ □ □ □ □ □

அப்பாடா, இன்று யார் முகத்தில் விழித்தோமோ ஒரு பெரிய பொல்லாப்பு வர வேண்டியிருந்ததிலிருந்து தப்பினோம் என்று என் மனம் எண்ணியது.

எனக்கு மனசு சரியாகவே யில்லை.

தீபாவளிக்குப் பட்டுப் பாவாடை எனக்குத்தான்; மகாபலிபுரப் பிரயாணமும் எனக்குத்தான் கிடைத்தது. இதெல்லாமாவது பரவாயில்லை. அன்று சாயந்திரம் கண்ணாடி உடைந்தபோது பாவம், சவிதா மட்டும் அடி வாங்கினாள். நானும் சேர்ந்துதான் விளையாடினேன். பார்க்கப் போனால் கடைசியாகப் பந்தைக் கண்ணாடி இருக்கிற பக்கம் வீசி எறிந்ததே நான்தான்.

அப்பா சவிதாவை அடித்தாற் போல் என்னையும் அடிப்பார்; பட்டுக் கொள்ளலாம். தூங்கிப் போய் மறுநாள் காலையில் எழுந்து கொண்டால் வலியெல்லாம் போய்விடும் எப்படியும் — என்று நான் அடிவாங்கத் தயாராய் நின்றபோது, அம்மா வந்தாள். அப்பா என் கழுத்தைப் பிடித்துக் கொண்டு விட்டார். அம்மா குறுக்கே வந்து நின்று விட்டாள். அப்பா அப்படியும் விடவில்லை. உடனே அம்மா கண்ணாலே ஏதோ ஜாடை செய்தாள். நான் நன்றாகப் பார்த்தேன் என் கண்ணாலேயே அம்மா சமிக்ஞை காட்டியதைப் பார்த்ததும் அப்பா சும்மா விட்டுவிட்டார்!

எனக்குத் தூக்கமே வரவில்லை. அம்மா ஏன் என்னவோ சூது வாதெல்லாம் பண்ணுகிறாள்? சவிதாவை அடித்தாற் போல் என்னையும் அடிக்கவிட வேண்டியதுதானே நியாயம்? ஏற்கனவேயே எனக்கு ஒரு மாதிரியான சந்தேகம் வந்து விட்டது. பட்டுப் பாவாடையும் எனக்கு; சுற்றுப் பிரயாணம் போகிற தற்றுப் பணமும் எனக்குத்தான் என்றால், அதுவே நியாயம் இல்லை, இல்லையா?

என் மனசு குடைய ஆரம்பித்தது. எனக்குக் கண்ணிலே தண்ணீர் வர ஆரம்பித்தது

விட்டது. நம்மை அம்மா ஏமாற்றுகிறாள் என்கிற எண்ணம் வந்துவிட்டது. இல்லாவிட்டால் என்னை மட்டும் கண்ணைக் காட்டிக் காப்பாற்றுவானேன்! சவிதாவுக்கு இல்லாத சலுகையெல்லாம் எனக்கு மட்டும் தருவானேன்? எனக்கு ஒன்றுமே புரியவில்லை.

அம்மா — அப்பா — சவிதா தான் உண்மையான குடும்பம் எனப் பட்டது. என்னை ஒதுக்கிறாற் போலத்தானே நடத்துகிறாள் அம்மா? எனக்குச் சந்தேகமாகவே இருந்தது. ஒரு நாள் பள்ளிக்கூடத்திலே டீச்சர் எல்லாரையும் அவரவர் பிறந்த தேதியைக் கேட்டுக் கொண்டு வரச் சொன்னாள். அப்பா சொன்ன தேதியை ஸ்கூலில் போய்ச் சொல்லிவிட்டு அப்படியே அந்தத் தேதியைக் குறித்து வைத்துக் கொண்டேன்.

அம்மா — அப்பா கல்யாணப் படம் கூடத்தில் மாட்டியிருக்கிறதே. அதில் அடியிலே தேதி போட்டிருக்கும். அதை ஓடோடி வந்து பார்த்தேன். என் சந்தேகம் சரியாகப் போய்விட்டது. எங்கேயாவது கல்யாணம் பண்ணிக் கொள்வதற்கு முன்னால் குழந்தை பிறக்குமா? என் பிறந்த தேதி அப்புறம் நாற்பது, நாற்பத்தைந்து நாட்கள் கழித்துத் தான் வருகிறது.

எனக்கு ஒரே அழுகையாய் வந்துவிட்டது. நமக்கு இந்த அம்மா இல்லை. நம் அம்மா வேறே யாரோ? சவிதாவுக்குத்தான் இது அம்மா என்று என் வாய் இரவு முழுதும் முணுமுணுத்துக் கொண்டேயிருந்தது.

குழந்தை சரயு பக்கத்தில்தான் படுத்திருந்தாள். விசித்து விசித்து அழுகிறாற்போல் ஓசை கேட்டது. நான் நினைத்தது சரிதான். தலையணையைத் தொட்டுப் பார்த்தால் ஒரே மடியாக நனைந்திருந்தது. எனக்குத் திக்கென்று போய்விட்டது. என்னவோ ஏதோ என்று ஒரு கணம் நான் பதறிப் போனேன். கூடத்தில் உள்ள எங்கள் கல்யாணப் படத்தைச் சிறிது நேரம் பார்த்துக் கொண்டு நின்றாள். அந்தப் படத்தைப் பார்த்து எதையோ அவளது வாய் முணுமுணுத்தது எனக்கு வியப்பாகக் கூட இருந்தது.

'சரயூ! சரயூ! விழித்துக்கொள்!' என்று அவளை எழுப்பினேன். விசித்து விசித்து எழுந்து கொண்டாள்.

"என்ன ஆயிற்று? ஏன் அழுகிறாய்?" நான் திகிலுடன் கேட்டேன்.

"அம்மா, நீ எனக்கு அம்மா இல்லையா உண்மையிலேயே?" என்று அவள் கேட்டதும் என் தலையில் நூறு இடி விழுந்தாற் போல் இருந்தது. மேலே என்ன கேட்பது என்று எனக்கே புரியவில்லை. அவள் கேட்டதற்கு என்ன சொல்வது என்று விழித்தேன்.

"சரயு பேசினாள் — எல்லாம் தெரியும், அம்மா, எனக்கு. நான் உன்னுடைய பெண் இல்லை என்கிறதனால், என்னை நீ தனியே நடத்துகிறாய் இல்லையா, அம்மா?"

எனக்குக் குழந்தையின் கேள்வி பிடிபடவே ஒரு நிமிடம் ஆகியது. "சொல்லேன், அம்மா. நீ சவிதாவை நடத்துகிற மாதிரி என்னை நடத்துகிறாயா?"

இது ஏதடா இந்த மாதிரிக் கேட்கிறாள்? மனம் அறிய ஒரு வேற்றுமையைக்கூடக் காட்டவில்லையே? இம்மியளவுகூட இவளை அவளுக்குக் குறைவாக நடத்தவில்லையே?

"சவிதா அன்றைக்குக் கண்ணாடியை உடைத்த போது அப்பாகிட்டே எவ்வளவு அடிபட்டாள்? நானும்தானே உடைத்தேன்? அப்பாவுக்கு நீ கண் ஜாடை காட்டி, என்னைத் தொடாதபடி பண்ணி விட்டாய் இல்லையா? என்னைத் தொட்டு அடிக்கக் கூடப்படாதா? நான் சவிதாவுக்கு அத்தனை மட்டமா, அம்மா? என் அம்மா இருந்தால், என்னை அடிக்க மாட்டாளா என்று நினைத்துக் கொண்டேன். அதுதான் அழுதுவிட்டேன். அம்மா எனக்கு இல்லை என்கிறதை நினைத்தால், அழுகை வராதா சொல்லு."

குழந்தையின் பேச்சு என்னை எங்கோ கொண்டு சென்று விட்டது. "நான் உன் அம்மா இல்லையா, சொல்லு, சரயூ?" என்று கத்தி விட்டேன்.

"அம்மாவாய் இருந்தால், தப்புப் பண்ணினால் என்னை அடிப்பாயே. நீதான் என்னை ஒதுக்கி விட்டாயே."

"இல்லை, கண்ணு, நான் ஒதுக்கவில்லை."

"பட்டுப் பாவாடை, சுற்றுப் பிரயாணம் எதுவானாலும் இனி மேல் எனக்குத்தான் என்று சொல்ல மாட்டாயே?"

"மாட்டேன்."

"நிச்சயம்?" — நிச்சயமாய்!"

"சவிதாவுக்கு என்னவெல்லாம் கொடுக்கிறாயோ, அவ்வளவும் எனக்குத் தருவாயா?"

எனக்கே பொறுக்க வில்லை. அறிந்தோ அறியாமலோ அவளுக்குக் குறைவாக ஏதும் செய்திருக்கிறேனா? "தராமல் எப்போதாவது இருந்திருக்கிறேனா சரயூ?" என்று அடிவயிற்றிலிருந்து கத்தி விட்டேன்.

"இல்லாமலா, நான் சொல்கிறேன்?"

"எப்போது அப்படிப் பண்ணினேன், சொல்லு." திகைப்புடன் விசாரித்தேன். அவள் பதில் கூறினாள் — "இப்பொழுது தானே சொன்னேன்? சவிதாவுக்கு மட்டும் அடி கிடைத்ததே எனக்குக் கிடைத்ததா? யாரோ ஊரார் வீட்டுக் குழந்தை மாதிரி என்னை நீ கண் சிமிட்டி அப்பா அடிக்காதபடி செய்ய வில்லையா? அவள் மட்டும் உயர்வோ? என்னை அடிக்கப்படாதா?"

"அதெல்லாம் இல்லை, கண்ணு. அவள் உயர்வு, நீ தாழ்வா?"

"அப்படியானால், அப்பாவை வந்து இப்பொழுது என்னை அடிக்கச் சொல்லு. அப்பொழுதுதான் தூங்குவேன்."

இப்படிச் சொன்னாளே ஒழிய, சிறிது நேரத்தில் சரயூ என்னையே அணைத்துக் கொண்டு கண்ணயர்ந்து விட்டாள். இன்னொருபுறம் சவிதா அவளை அணைத்துக் கொண்டிருந்தாள். அவர்கள் இருவரையும் பார்த்த போது என் நெஞ்சம் பெருமையில் விம்மியது. என்னையே நோக்கிக் கொண்டிருந்த அவருடைய கண்களிலும் பெருமிதம் நிரம்பி வழிந்தது.

ஜூலை 7உ முதல்

சென்னை :
கெயிட்டி • ஸ்ரீ கிருஷ்ணா
மஹாலக்ஷ்மி மற்றும்
தென்னாடெங்கும் ...



பால்ஸ் & கம்பெனி

# எங்களுக்கும் காலம் வரும்



திரைக்கதை-வசனம்: பாசுமணி
பாடல்கள் :
கண்ணதாசன் • வாலி
இசை : ராமமூர்த்தி
மூலக்கதை : சம்புமித்திரா

PALS & CO

SEMBI

டைரக்ஷன் : A. வின்சென்ட் ☆ தயாரிப்பு-நிர்வாகம் : சுதியம் - நஞ்சுண்டன்



# மதுரைத் திருவள்ளுவர் கழக வெள்ளி விழா

**( 6—7—67 முதல் 10—7—67 முடிய )**

**இடம்: மீனாட்சி சுந்தரர் திருக்கோவில், வடக்காடி வீதி**

**6 - 7 - 67** திருப்பெருந்திரு சோமசுந்தர் தேசிகபரமாசாரிய அடிகளார் தலைமையில் திருவாவடுதுறை சகோதரர்கள் டி. எம். சிவலிங்கம் சபாபதி குழுவினர் இன்னிசை

**7 - 7 - 67** திருக்குறள் மாநாடு **தலைவர்: தலைமை நீதிபதி திரு எஸ். மகராச பிள்ளை**

பங்கு பெறுவோர் : திருவாளர்கள் தமிழவேள் பி. டி. இராசன், வே. வ. இராமசாமி நாடார், தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், ம. பொ. சிவஞான கிராமணியார், கி. ஆ. பெ. விசுவநாதம், வெள்ளைச்சாமி நாடார், மோகன் குமாரமங்கலம், வி. வி. கி. ஆர். முருகேச முதலியார், கி. இராமலிங்கனார், ஔவை துரைசாமிப் பிள்ளை, சி. இராமலிங்கம், எம். கலியாண சுந்தரம், டி. எஸ். நாராயணசாமி, தர்மராச சந்தோசம், எம். இராசா ஐயர், எஸ். எம். செரிப், வி. பி. ஆர். கங்காராம் துரைராசு, ஆர். இராமானுசம், ஏ. வெங்கடேசுவர ஐயர், பி. அரங்கசாமி நாயுடு, எம். சண்முகசுப்பிரமணியம், கமலம் தியாகராசன், சு. கலியாணம் பிள்ளை, திருவாட்டியர் இராதா தியாகராசன், டாக்டர் லலிதா காமேசுவரன், சௌந்தரம் கைலாசம், சரோஜினி வரதப்பன், தே. தியாகராசன் முதலானோர்.

இரவு தமுக்கம் மைதானம் கலை அரங்கில் சீர்காழி கோவிந்தராசன் குழுவினரின் இன்னிசை.

**8 - 7 - 67** இசை விழா தலைவர் : திரு டி. கே. சிவசாம்பன்

பேச்சு : குடந்தை திரு ப. சுந்தரேசன்

கவியரங்கம் தலைவர் : அ. கி. பரந்தாமனார்

பங்குபெறும் கவிஞர்கள் : திருவாளர்கள் முடியரசன், அப்துர் ரகுமான், கதி. சுந்தரம், ச. பாலசுந்தரம், ந. செகதீசன், சொ. சொ. மீ. சுந்தரம்.

திருக்குறட் பட்டி மன்றம் : தலைவர் கி. ஆ. பெ. விசுவநாதம்

பங்கு பெறுவோர் : திருவாளர்கள் திருக்குறள் முனிசாமி, ம. ரா. போ. குருசாமி, கு. சிவமணி, சி. இராமலிங்கம், ஆ. இராமசாமிப் பிள்ளை.

இரவில் எம். எம். தண்டபாணி தேசிகரின் இன்னிசை நிகழும்.

**9 - 7 - 67** நாடக விழா தலைவர் : திரு டி. கே. சண்முகம்

பேச்சு : திருவனந்தபுரம் ப. சனார்த்தனம்

திருக்குறட் கருத்தரங்கு : தலைவர் : திருப்பெருந்திரு குன்றக்குடி அடிகளார்

பங்கு பெறுவோர் : திருவாளர்கள் ந. ரா. முருகவேள், ஸ்ரீ பால், மயிலை சீனி வேங்கடசாமி, தமிழ்நூர் முகம்மது, ரம்போலோ மஸ்கரேனெஸ், திருக்குறள் முனிசாமி.

> **மாலை 6-30 மணிக்கு தமுக்கம் மைதானம் கலை அரங்கில் திருமதி எம். எஸ். சுப்புலட்சுமி அவர்களின் இன்னிசை நிகழும்.**

மூன்று நாட்களிலும் தமுக்கம் மைதானம் கலை அரங்கில் டி. கே. எஸ். சகோதரர்களின் இராஜராஜ சோழன், அப்பாவின் ஆசை, ஔவையார் ஆகிய நாடகங்கள் நடைபெறும்.

**10 - 7 - 67** கலை நிகழ்ச்சி : செல்வன் - மோகன் காமேசுவரன், செல்வியர் சியாமளா, செயந்தி, உமாமகேசுவரன் ஆகியோரின் கலைநிகழ்ச்சிகளும், திருவள்ளுவர் கலைக்குழுவினர் நடிக்கும் "மனமாற்றம்" என்ற நாடகமும் நடைபெறும்.

**கலைநிகழ்ச்சி கட்டணம் விவரம்**

ஒவ்வொரு நாடகத்திற்கும் தனித்தனிக் கட்டணம் ரூ. 10, 5, 3, 2.
மூன்று நாடகங்களுக்கும் சேர்த்துக் கட்டணம் ரூ. 25, 12, 7, 5, 2.
சீர்காழி திரு கோவிந்தராசன் இன்னிசைக்குக் கட்டணம் ரூ. 5, 3, 2, 1.
திருமதி எம். எஸ். சுப்புலட்சுமி இன்னிசைக்குக் கட்டணம் ரூ. 15, 10, 5, 3, 2.

# பழத்துக்குள்ளே சுளை; சுளைக்குள்ளே விதை!

புதிதாகச் சேர்ந்த சிப்பந்தியை நோக்கித் தோட்டச் சொந்தக்காரர், "நமது ஆரஞ்சுத்தோட்டத்திலே உனக்கு என்ன வேலை தெரியுமல்லவா?" என்று கேட்டு விட்டுத் தொடர்ந்து சொன்னார்:

"முதலில் தோட்டத்தில் எத்தனை பகுதிகள் இருக்கின்றன என்று பார்க்க வேண்டும். ஒவ்வொரு பகுதியிலும் எத்தனை மரங்கள், மரத்தில் எத்தனை கிளைகள், ஒவ்வொரு கிளையிலும் எத்தனை பழங்கள் இருக்கின்றன என்றும் பார்க்க வேண்டும்."

"ஒவ்வொரு பழத்திலும் எத்தனை சுளைகள் இருக்கின்றன, ஒரு சுளையிலே எத்தனை விதைகள் இருக்கின்றன என்றும் பார்த்து விடுகிறேன், ஐயா!" என்று மிக உற்சாகமாகப் பதில் அளித்தான் புதிதாக வந்த சிப்பந்தி!

— கல்சாமி



## பல்சுவைப் பக்கம் 2

"அப்போ எல்லாமே முடித்து விட்டீர்கள்போலிருக்கே?"

"ஆமாம்!"

"இனி மேல் நான் எழுந்துக் கொண்டு போகலாம் அல்லவா? வீட்டிலே பிள்ளைகள் எல்லாம் ஆத்திரத்தோடு காத்திருக்கிறார்கள், காசு கொடுத்து வாங்கிய பத்திரிகை நம் கைக்கு வராமல் அண்டை வீட்டுக்குப் போய் விடுகிறதே என்று..."

- கல்சாமி



# ஓர் அபூர்வ வேலை!

உலகிலேயே மிக அபூர்வமான வேலையில் ஏறத்தாழ 40 பேர்களே ஈடுபட்டிருக்கிறார்கள். மனித குலத்துக்கு நன்மை பயக்கும் வேலையே அது. செயற்கைக் கண்களைத் தயாரிப்பது இவர்களின் வேலை. இவர்களில் ஒருவரான பிரான்ஸ் கிறிஸ்ட் ஜெர்மனியில் விஸ்பாடன் நகரில் வாழ்கிறார். ஒவ்வொரு செயற்கைக் கண்ணாடி கண்ணும் மிக நுண்ணிய முறையில் தயாரிக்கப்படுகிறது. செயற்கைக் கண்கள் தயாரிக்கும் முறை "தொழில் இரகசியமாக"ப் பாதுகாக்கப்படுகிறது.

டாட் - யூ. பி. எஸ்.

# இங்கல்ல ரஷ்யாவில்!

இதில் 48 மிலியன் குழந்தைகள் கல்வி பயிலுகிறார்கள். 1970க்குள் 22,000 புதிய பள்ளிகள் கட்டப்படவிருக்கின்றன. ரஷ்யாவில் 130 பாலர் அரங்கங்கள் உள்ளன. 'இளைஞர்களுக்கான பத்திரிகைகளும் சஞ்சிகைகளுமாக 19 மொழிகளில் மொத்தம் அறுபது இருக்கின்றன. இதில் 'பயனியர்ஸ் கியா பிராவ்டா' என்ற பத்திரிகையின் விற்பனை என்ன தெரியுமா? எட்டு மிலியன் பிரதிகள். குழந்தைகள் நூலகம் மட்டும் ரஷ்யாவில் 5000 உள்ளன. இவைகளில் 120 மிலியன் புத்தகங்கள் இருக்கின்றன. ரஷ்யாவில் உள்ள பள்ளி ஆசிரியர்களின் எண்ணிக்கை? -- 2,400,000 உபாத்தியாயர்கள்.

ஆதாரம் : மாஸ்கோ நியூஸ்





திருமுருக கிருபானந்தவாரியார்

## 77. களவும் புண்ணியத்தின் அளவோ?

ஒரு செயல் குற்றம் என்பதும் குணம் என்பதும், அது செய்தார் மன நிலையைப் பொறுத்துளது. பொய்யும் களவும்கூடச் சில சமயத்தில் புண்ணியத்தைத் தருகின்றன.

ஒருவன் மாண்டு போகக் கருதி வைரத்தை வைத்திருந்தான். அவனைக் காக்கும் கருத்துடன் அவ்வைரத்தைக் களவு செய்தால், அது குற்றமாகாது. செயல் களவாயினும் கருணையால் நிகழ்ந்த நிகழ்ச்சி. அதற்குப் பாவமில்லை; புண்ணியம் உண்டு.

வளமை மிகுந்த மலர்ச் சோலைகள் சூழ்ந்த கோனாட்டின் தலைநகரம் கொடும்பாளூர். குறுநில மன்னர் குலத்திலே, கனகசபையின் முகட்டைப் பசும் பொன்னால் வேய்ந்த ஆதித்தன் குடியிலே அவதரித்தவர் இடங்கழி நாயனார்.

ஆகமத்தில் உள்ள சைவநெறியையும், வேதத்திலுள்ள தரும நெறியையும் பாதுகாத்து வந்த அவர், ஆங்காங்குள்ள அரனார் ஆலயங்களில் வழிபாடு மேன்மேலும் சிறப்பாக நடக்குமாறு நிலங்களை நிபந்தமாக விடுத்தார். உள்ளம் உருகி வள்ளற்பிரானை வழுத்தி வாழ்த்தி வணங்குவார்.

சிவனடியார்களுக்குத் திருவமுது செய்விக்கும் ஓர் அடியார் புரியும் அன்னதானத்துக்கு முட்டு வந்தது. அதனால் அவர் மனம் தளர்ந்தார். செய்வதறியாது திகைத்தார். இடங்கழி நாயனாராகிய மன்னருடைய பண்டாரத்திலே நெல்கூட்டு நிறைகள் நிறைந்த கொட்டாரத்தில் நடு இரவில் புகுந்து நெல்லை முகந்து எடுத்தார். காவலர்கள் அதைக் கண்டு அவரைப் பிடித்துக் கொண்டார்கள். அவரைக் கொண்டு வந்து இடங்கழியார் முன் நிறுத்தினார்கள்.

"ஏன் இவ்வாறு செய்தீர்?" என்று அவரை நோக்கி வினவினார் இடங்கழியார். "மன்னர் பெருமானே! அடியேன் அடியார்க்கு இடையறாது அமுது செய்விக்கும் நியதி பூண்டவன். என்பால் இருந்த பொன்னும் நெல்லும் செலவழிந்து விட்டன. வறியவனானேன். அடியார்க்கு அமுது செய்விப்பதைக் காட்டிலும் சிறந்த பேறு இல்லை. அதற்கு இடர் வந்ததனால் இவ்வாறு செய்தேன்" என்றார்.

மன்னர்பெருமான் உள்ளம் நெகிழ்ந்தார். "அடியேனுக்கு இவரல்லவா பண்டாரம்?" என்றார். அவர் வேண்டிய நெல்லையும் பொன்னையும் முகந்து கொள்ளச் செய்து தொழுது அவரை இனிது அனுப்பினார்.

பின்னர் தம்மிடம் உள்ள நெற்குவியல்களையும், பொன்மணிகளையும் அடியார்கள் வந்து முகந்து போகும்படி எங்கும் பறைசாற்றுவித்தார். படைத்த நிதியின் பயன்கொள்ள அவ்வாறு புரிந்தார். அடியார்கள் வந்து நெல்லையும் பொன்னையும் கொண்டு போகும்படி செய்து உள்ளம் மிக உவந்து, வெகுகாலம் திருநீற்றின் நெறி தழைத் தோங்கப் புரிந்து, பின்னர் முன்னவனார் திருவடி நிழலை அடைந்து நீடிய இன்பம் பெற்றார்.

செருத்துணையார் என்று பேர் பெற்ற நாயனாரின் சரித்திரத்தைக் கழற்சிங்கர் கதையிலேயே படித்து விட்டோம். மகாராணியின் மூக்கையே அரியும் அளவுக்கு இவருக்கு மகாதேவனிடம் பக்தியாவேசம் இருந்தது. இந்தப் பக்தியாவேசமே இவரது சரிதையில் நாம் பெறும் படிப்பினை.

## 78. கண்ணுதல் காசு தந்தார்!

"புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு" என்றபடி இறைவனை மலரிட்டு மஞ்சனமாட்டி வழிபடுவதே பெரிய தவமாகும். அவ்வழி

பாட்டில் ஆத்மார்த்தம் பரார்த்தம் என்று இரு வகை உண்டு.

''ஆத்மார்த்தமாகவும் பரார்த்தமாகவும் பூசியாமல், பார்ப்பான் என்று பேர் மட்டும் கொண்ட மற்றையோர் திருக்கோயில்களில் பூசித்தால் மன்னவன் துன்புறுவான்; நாடு பஞ்சத்தால் வாடும்'' என்கின்றார் திருமூலர்.

பேர்கொண்ட பார்ப்பான் பிரான்றனை யர்ச்சித்தால்
போர்கொண்ட வேந்தர்க்குப் பொல்லா வியாதியாம்
பார்கொண்ட நாட்டுக்குப் பஞ்சமு மாமென்றே
சீர்கொண்ட நந்தி தெரிந்துரை த்தானே

இரு வழிபாடுகளிலும் சிறந்த சிவ மறையோர் திருமரபிலே, சிறப்பு மிக்க ★அரிசில் கரைப்புத்தூரில் அவதரித்தவர் புகழ்த்துணை நாயனார். இவர் சிவாகம விதிப்படி சிவபெருமானைப் பூசித்து வந்தார்.

புகழ்த்துணை நாயனார் வரலாற்றை இத்தலத்துத் தேவாரத்தில் சுந்தரர் கூறி யருளி யிருக்கின்றார்.

அகத்தடிமை செய்யும் அந்தணன்றான்
அரிசிற்புனல் கொண்டுவந் தாட்டுகின்றான்
மிகத்தளர் வெய்திக் குடத்தையும் நும்முடிமேல்
விழுத்திட்டு நடுங்குதலும்
வருத்தவனுக்கு நித்தற் படியும்
வருமென் றொருகாசினை நின்றநன்றிப்
புகழ்த்துணை கைப்புகச் செய்து உகந்திர்
பொழிலார் திருப்புத்தூர் புனிதன் நீரே

அக்காலத்தில் பஞ்சம் வந்துவிட்டது. பசி நோய் வந்து வாட்டிய போதும், மெய்யும் கையும் அயர்ந்த போதும் உள்ளம் அயராது இரவு பகலும் ஈசன் அடியில் நேசம் வைத்து அர்ச்சித்துப் பூசிப்பாராயினர் புகழ்த்துணை நாயனார். சிவலிங்கத்துக்குத் திருமஞ்சனம் புரியும் போது, பசிப் பிணியால் மிகவும் தளர்வு எய்தி, தண்ணீர் நிறைந்த குடத்தைக் கரம் தாங்க மாட்டாது இறைவர் திருவடி மிசை விழ, அதனால் பெருந்துன்பமுற்று விழுந்து மூர்ச்சித்து விட்டார்.

சிவபெருமான் அருளால் அங்ஙனமே அயர்ந்து தூங்கி விட்டார். அவர் கனவில் சண்ணுதற் கடவுள் கருணையுடன் தோன்றினார். ''அன்பனே! பஞ்சம் நீங்கும் வரை உனக்கு நாம் நாள்தோறும் இங்கு ஒரு காசு வைப்போம்'' என்று அருளிச் செய்தார்.

புகழ்த்துணை நாயனார் கண் விழித்து எழுந்தார். எம்பிரானுடைய இனிய அருளை நினைந்து உருகினார். இறைவனது பீடத்தின் கீழ் ஒரு காசு இருக்கக் கண்டு எடுத்துக் கொண்டு வந்தார்.

இங்ஙனமே வாகீசருக்கும், பாலறாவாயருக்கும் இறைவர் படிக்காசு தந்தனர். வைத்தீச்சுரன் கோயிலில் இருந்த ஓர் அடிகளாருக்கும் தந்தனர். அதனால் அவர் படிக்காசுத் தம்பிரான் என்று பெயர் பெற்றார்.

இது போல் அருணகிரிநாதருக்கும் சென்னிமலையில் முருகன் படிக்காசு வழங்கியதாகச் சென்னி மலைக் காதல் என்னும் நூல் புகல்கின்றது.

இதனால் இறைவனை இடையறாது அன்புடன் இறைஞ்சுவார் நோயடையார், பசியுறார், பேயடையார், மற்றும் பல துன்புறார் என்பது ஒரு தலை. அருந்துணையாய் அடியவர்தம் அல்லல் தீர்க்கும் ஈசனை நேசமுடன் பூசனை புரிந்து பாச பந்தம் களைந்து அன்பர்கள் உய்வு பெறுதல் வேண்டும்.

## 79. கொலையால் மேலை நிலை தந்தார்

சோழ நன்னாட்டிலே நாட்டியத்தான்குடி என்னும் ஊரிலே, வேளாளர் திருமரபிலே வந்து அவதரித்தவர் கோட்புலி நாயனார். இவர் சோழ மன்னனிடம் சேனாபதியாக இருந்தார். பல போர்முனைகளுக்குச் சென்று மன்னர்களை வென்று புகழ் ஈட்டினார்.

மன்னவன் தரும் அளவற்ற நிதிகள் அத்தனையும் கொண்டு வந்து, சிவபெருமானுடைய திருக் கோயில்கள்தோறும் திருஅமுதுக்குச் செந்நெல் தந்து பெரும் பணி புரிந்து மகிழ்வார். அப்பணிக்காக நெல்லை மலைபோல் குவித்து, படியளந்த பச்சை வண்ணன் பணியும் பரமனுக்குப் படி கொடுத்து வந்தார்.

ஒரு சமயம் மன்னவன் கட்டளைப்படி வேற்று நாட்டின் மீது போருக்குப் புறப்பட்டார் கோட்புலி. ஆலமுண்ட அரனார் அமுது படிக்காகத் தாம் திரும்பி வரும் அளவும் போதுமான அளவுக்கு நெல் பொதி செய்துவிட்டுப் புறப்பட்டார். தமது சுற்றத்தார் களைத் தனித்தனியே நோக்கி ''இது சிவனார்க்கு உரியது. இதனின்றும் நெல் எடுத்தால் சிவத் துரோகம்'' என்று கூறி விட்டுப் போர்க் களம் போனார்.

அவர் சென்ற சில காலத்துக்குப் பின் பஞ்சம் வந்து சேர்ந்தது. சுற்றத்தார் இறைவனுடைய அமுது படிக்காக

★ இது குடந்தையிலிருந்து நாச்சியார் கோயிலுக்குப் போகும் வழியில் திருநாரையூர் என்ற தலத்துக்கும் சிவபுரம் என்ற தலத்துக்கும் இடையில் உள்ளது.

வுள்ள நெல் கூடுகளை நிவேதனம் செய்யாமலே அழித்து உண்டார்கள்.

போர் முனை சென்ற கோட்புலி நாயனார் வெற்றி பெற்று மீண்டு மன்னவன் தந்த பொற் குவியலுடன் தமது ஊர் வந்தார். நெற்குவியலை எடுத்துச் சுற்றத்தார் உண்டதை அறிந்து சினம் மூண்டார். நிவேதனம் செய்தாலும் அன்னத்தை இறைவன் உண்பதில்லை. மக்களே அதைப் பிரசாதமாக உண்கின்றார்கள். அப்படியிருந்தும் நிவேதியாமல் உண்ட சுற்றத்தார் அத்தனை பேரையும் அழைத்தார் கோட்புலி. ஒருவரையும் ஓட விடாதபடி காவல் புரியச் செய்து, சிவன் பொருளை வௌவிய சுற்றத்தார் அனைவரையும் பணியாளரையும் வாளினால் துணித்தார்.

அங்கே பிழைத்த ஓர் ஆண் பிள்ளையைக் கண்ட காவலாளன், "ஐயனே! இது சின்னஞ் சிறு குழந்தை; நம் குடிக்கு ஒரே புதல்வன். இப்பாலகன் அவ்வன்னத்தை உண்டதில்லை. இதனைக் கொல்லாதருள் புரியும்" என்று வேண்டினார். "இது நெல் உண்டவனுடைய பாலை உண்டது" என்று அதை வாளினால் துணித்தார் கோட்புலி நாயனார்.

பாவங்களில் மிகக் கொடிய பாவம் சிவத் துரோகமாகும். ஈசனுடைய பொருளைக் கவர்ந்துண்பார் கொடிய நரகெய்திப் பன்னெடுங்காலம் பரதவிப்பார். கோட்புலி நாயனார் தமது சுற்றத்தினர் நரகிடை விழ்ந்து நலியா வண்ணம் உடனுக்குடனே தண்டித்து அவர்களது தீவினையைத் தீர்த்தார் எனக் கொள்க. உதிரக் கட்டி வந்தவனை மருத்துவன் அறுத்துச் சுடுவது போல் அவர் செய்தார் எனக் கொள்க.

"குழந்தையைக் கொல்வானேன்? அது அறியாமல் செய்ததுதானே?" என்று ஐயங்கள் தோன்றும். நெருப்பை அறிந்து மிதித்தாலும் சுடும்; அறியாமல் மிதித்தாலும் சுடும் என்று தெளிக.

கோட்புலி நாயனார், குழந்தையை வாளினால் துணித்த அக்கணமே சிவபெருமான் அவர் முன் தோன்றினார். "அன்பனே! உன் கைவாளால் மாண்ட சுற்றத்தார் பாவத்தினின்றும் நீங்கினர். அவர்கள் பொன்னுலகம் புகுந்து இன்புறுவர். நீ இந்நிலையுடன் நமது சிவபதம் அடைவாய்" என்று அருள் புரிந்தார்.

## 80. பத்தராய்ப் பணிவார்

பக்தி என்பதும் அன்பு என்பதும் ஒரு பொருள் கிளவிகள். பக்தி—வடசொல்; அன்பு — தென் சொல்.

இறைவனை அடைவதற்கு எத்தனையோ நெறிகள் இருப்பினும் பக்தி நெறியே எளிமையான வழி. "பக்தி நெறியறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம் சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட அத்தன்" என்றார் மாணிக்கவாசகர். "பத்திவலையில் படுவோன் காண்க" என்றும் அருளிச் செய்கின்றார். "அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே" என்ற வள்ளலாரின் அமுத வாக்கையும் ஈண்டு நினைவுகூர்க. "பத்தினி பத்தர்கள் தத்துவ ஞானிகள்" என்கின்றார் திருமூலர்.

"பத்தராய்ப் பணிவார்" என்ற தொகையடியாரின் புராணம் பத்தர்களுடைய இலக்கணங்களை மிக நன்றாக விளக்குகிறது. "பாம்பறியும் பாம்பின்கால்" என்றபடி பத்தர்களைப் பற்றிப் பத்த மணிவிளக்காய் விளங்கும் சேக்கிழார் பெருமானை யன்றி யாவர் பகரவல்லார்?

பத்தராய்ப் பணிவார்கள் என்போர், சிவனடியார்கள் யாவரையும் தாய்ப்



மகனைக் கண்ட கன்றைப்போல் உள்ளம் உருகி, அன்பு வெள்ளம் பெருகி இனிய மொழி கூறிப் பணிவார்கள். சிவார்ச்சனை புரியக் கண்டவுடன் கண்ணும் கருத்தும் குளிர்ந்து இன்புறுவார்கள். அரனையும் அரனடியார்களையும் ஆராத காதலுடன் வழிபடுவார்கள். எல்லாப் பணிகளையும் சிவார்ப்பணமாக, புண்ணியத்தையும் புகழையும் விரும்பாமல் புரிவார்கள். பிறவா நெறி பெற்ற அவர்களுடைய புகழ் புவனம் கடந்து நிற்கும். சிவ கதையே கேட்டுச் சிந்தை மகிழ்வார்கள். அந்தரங்க பக்தி புரிவர். சிவபெருமானுடைய செம்மலர் நோன்றாட் கமலங்களைச் சேர்வதற்கு இவர்களே உரியவர்கள். பரமனைப் பணிந்து உருகி இன்ப மேலீட்டினால் சிவ சிவ ஹர ஹர என்று கூறி நாவில் தழும்பேறி நிற்பார்கள். தாரை தாரையாகக் கண்ணீர் பெருக, அதனால் திருநீறழிய, மயிர் சிலிர்க்க, உடல் நடுங்க அன்பு செய்வார்கள். எப்போதும் இடையறாது ஈசனையே நேசமுடன் நினைக்கும் திருவுடையவர்களாக விளங்குவார்கள்.

நின்றாலும் இருந்தாலும் கிடந்தாலும் நடந்தாலும்
மென்றாலும் துயின்றாலும் விழித்தாலும் இமைத்தாலும்
மன்றாடு மலர்ப்பாதம் ஒருகாலும் மறவாமை
குன்றாத உணர்வுடையார் தொண்டராம் குணமிக்கார்

## 81. பரமனையே பாடுவார்

சூடு அதிகமானால் பால் பொங்கி அழியும். அதே போல் ஒருவர்மீது ஒருவர்க்கு அன்பு அதிகரிக்குமானால், அன்புடையாரைப் புகழ்ந்துரைக்காமல் இருக்க முடியாது. புகழ்ந்துரை பாடலாகிறது. ஆகவே, இறைவனிடம் அளவற்ற அன்பு மேலிடுகின்றபோது இறைவனை உளங் குழைந்து பாடுகின்றார்கள். ''பாடுகின்ற பனுவலோர்கள் தேடுகின்ற செல்வமே'' என்கிறார் தாயுமானார். பாடுகின்றபோது கருவி கரணங்கள் ஒடுங்குகின்றன. பக்தியுடன் பரமனைப் பாடினால் பவப் பிணி போகும்; பரகதி கூடும்.

''பரமனையே பாடுவார்'' என்ற தொகையடியார் தென் தமிழும், வடமொழியும், ஏனைய இசை மொழிகளும் நன்கு பயின்றவர்கள். பரமனையே பாடுவார் என்பதில் உள்ள ஏகாரம் பிரிநிலை—சிலர் மனிதர்களையும் பொருள் வேண்டிப் பாடுகின்றனர். சிலர் காம வெறி கொண்டு மகளிரையும் புகழ்ந்து பாடுகின்றனர். அவ்வாறு அழிந்து படுகின்ற மனிதர்களைப் பாடாமல் அழிவற்ற ஆண்டவனையே பாட வேண்டும்.

பரமனையே பாடிய பக்தர்களைச் சேக்கிழார் பாடும் அழகைப் பார்த்துப் பரவசமடையுங்கள்.

புரமூன்றுஞ் செற்றானைப் பூணாகம் அணிந்தானை
உரனில் வரும் ஒருபொருளை உலகனைத்தும் ஆனானைக்
கரணங்கள் காணாமல் கண்ணார்ந்து நிறைந்தானைப்
பரமனையே பாடுவார் தம்பெருமை பாடுவாம்

## 82. சித்தத்தைச் சிவன்பால் வைத்தார்

இடைபிங்கலை வழியே உச்வாஸ நிச்வாஸமாகச் சென்று மீளும் பிராண வாயுவை யடக்கி முதுகுத் தண்டின் இடையே ஓடும் தாமரை நூல் போன்ற நுண்ணிய சுழுமுனை நாடி வழியே பிராணவாயுவைச் செலுத்தி, அதனை நிறுத்தி, அதனால் நெடுங்காலமாகக் குரங்குபோல் ஓடி அலைகின்ற மனத்தை அடக்க வேண்டும். அவ்வாறு அடக்கி மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆறு ஆதாரங்களையும் அகக் கண்ணால் காண வேண்டும். அவைகளில் வீற்றிருக்கிற அதி தேவதைகளாகிய விநாயகர், பிரம்மா, திருமால், உருத்திரர், மகேசுவரர், சதாசிவர் என்ற மூர்த்திகளைத் தியானித்து அவர்களை நேர்முகம் செய்து, அவை கடந்து பிரமரந்திரம் சென்று ஜபநிலை கடந்த அஜபா நலமுற வேண்டும். அப்பிரமரந்திரத்தின்மேல் கீழ் நோக்கியுள்ள ஆயிரம் இதழ்த்தாமரை முகையை (சகஸ்ராரம்) சோதிபத உச்சரிப்பால் உதிக்கும் சிவசூரியனால் மலரச் செய்தல் வேண்டும். அத்தாமரைப் பூவின் நுனியில் உள்ள சந்திர மண்டலத்தைச் சுருக்குதலினால் மூலாக்கினியை அக்கினி பீஜ மந்திரத்தால் எழுப்பி, நாடிச் சக்கரத்தைப் பிளந்து கொண்டு அவ்வக்கினியாலே சந்திர மண்டலத்தை இளகச் செய்து அங்கு பொங்கி வரும் அமிர்தத்தை எல்லா நாடிகளிலும் நிரப்பி, அங்கு உண்டாகிய சயோகத்தில் ஞானமிர்தம் உண்டு, சூரியன் ஒளியில் நட்சத்திரங்கள் அடங்குமாறு போல், தன்னிடம் உண்டாகிய சிவஞான ஒளியில் சூரிய சந்திர ஒளி அடங்க அருட்பெருங் கடலாடி, அச்சிவவொளியில் அசைவற நிற்றல் வேண்டும். இவ்வுன்னத நிலை எய்தியோரே சித்தத்தைச் சிவன்பால் வைத்தவர் எனப்படும் நாயன்மார் கணமாகும்.

(தொடரும்)

# பலமா......... பலமா..

"ஆதௌ கீர்த்தனாரம்பத்திலே..." நான் ஏதும் கதை பண்ண ஆரம்பித்துவிட்டேனோ என்று பயப்பட வேண்டாம்! இந்தக் கதை பண்ற விஷயமே எப்படித் தோன்றியிருக்க முடியும் என்று யோசனை பண்ணிண்டு இருக்கேன்! ஆதிநாளிலே பகவானைப் பாட்டாலேயே பிரார்த்தித்துக் கொண்டிருப்பார்கள்! சாரீர வசதி அத்தனை இல்லாதவர்கள், அந்தப் பாட்டையே கொஞ்சம் நீட்டி நீட்டிப் பேசியிருப்பார்கள். பிரார்த்தனை சம்பந்தப்பட்ட பக்தி விஷயங்களை மற்றவர்களுக்கு எடுத்துச் சொல்லும் போது பாட்டையும், வசனத்தையும் கலந்து அடிக்க ஆரம்பித்திருப்பார்கள். இது என் சொந்த யோசனை. இதற்கு யாரும் பொறுப்பு இல்லை!

இசையையும் வசனத்தையும் சாதகப்படுத்திப் படுத்திக் கதாகால க்ஷேபம் செய்கிறவாளுக்குப் பொறுமையும் ரொம்பத் தேவையாகத்தான் இருக்கணும்! இந்தப் பொறுமை சாதகம் அவாளுக்கு ஏராளமான நகைச் சுவையையும் வாரி வழங்கியிருக்கிறது.

கதையை விட்டுக் கொஞ்சம் விலகி, டாபிகல் சப்ஜெக்டுகளைத் தொடறவாளுக்குத்தானே இந்தக் காலத்திலே மதிப்பு! ஜனங்களுக்குக் கேட்கிற பொறுமை குறையுமோன்னு அவாளுக்குச் சந்தேகம் ஏற்படற வேளையிலே இப்படித் திடீர்னு ஒரு புது 'ஆங்கிள்'லே திரும்புவா!"

ஆனால் பழைய காலத்திலே பிரசித்தி பெற்ற பாகவதர்கள் எல்லாம் தங்கள் பொறுமை திடீர்னு மாயமாய் மறைந்து போய்விடக் கூடாதென்று, விஷயத்தை விட்டு விலகாமலேயே அற்புதமாய்ச் சமாளிப்பார்களாம்! ஜனங்களுக்கு நிச்சயமாய்ப் பொறுமை குறையாது அந்த நாட்களிலே! பாகவதருக்குப் பொறுமை குறைஞ்சுட்டா அப்புறம் 'உம்மணா மூஞ்சி' பாகவதர்னு பட்டம் சூட்டி விடுவாளே!

ஹரிகேசவநல்லூர் முத்தையா பாகவதர்னு கேள்விப்பட்டிருக்கேளா? காலக்ஷேபக் கலையிலே பெரிய மன்னன்! அவர் ஒரு சமயம் 'சீதா கல்யாணம்' காலக்ஷேபம் பண்ணிண்டு இருந்தார். கதையிலே ரொம்ப சுவாரசியமான கட்டம்! மிதிலாபுரித் தெரு வழியாக வந்து கொண்டிருந்த ராமபிரானை ஜனக மகாராஜன் மாளிகையின் மாடியிலிருந்த சீதா பிராட்டி பார்த்துப் பரவசமாகும் இடம். 'அழகுள்ள துரை இவர் யாரடி?' என்று சீதாதேவி தன் தோழியைப் பார்த்துக் கேட்கும் காம்போதி ராகப் பாட்டை உணர்ச்சிபரவசராக நின்று பாகவதர் பாட ஆரம்பித்தார். நிரவல், ஸ்வரம், எல்லாம் அமர்க்களம். அவரே சீதையாக மாறிவிட்டார்.

அந்தச் சமயம் பார்த்து உள்ளூர்ப் பெரிய மனிதர் ஒருவர், சற்று உயரமாக இருப்பவர், முன் வரிசையில் தம் இடத்தைப் பிடிக்க முண்டியடித்துக் கொண்டு வந்தார்! தமக்கு பாகவதரைத் தெரியும் என்பதை மற்றவர்கள் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற அற்ப ஆசையால், பாகவதர் முன் நின்று கரம்கூப்பி, பாகவதர் கவனத்தைக் கதை ஓட்டத்திலிருந்து கலைத்துவிட்டுத் தான் உட்கார்ந்தார்.

கோமதிஸ்வாமிநாதன்

# திருப்பித்தரும் நேரம்



என் உயிரை எனக்கு அன்பளிப்பாகவே கடவுள் அளித்ததாக நினைக்கிறேன். அதை அடைவதற்கு நான் ஒன்றும் செய்துவிடவில்லை. அப்படியிருக்க அதைத் திருப்பிக் கொடுக்கும் நேரம் வந்தவுடன் புகார் செய்யவும் எனக்கு உரிமை கிடையாது.
ஜாய்ஸ் கேரி கூறியது — மென் ஒன்லி
— மூத்து

---

இந்தக் காலத்துப் பொதுக்கூட்டமா? 'சரி தானேயா! உட்காரு சும்மா!' என்று சொல்லி விட முடியுமா? எல்லோருமே விஷயம் தெரிஞ்சவாளாயிற்றே! கிருஷ்ண பாகவதர் யம காதகர். சாஸ்திரிகள் நோக்கத்தைப் புரிந்து கொண்டார்.

''ஒருத்தருக்கு எழுதின லெட்டரை, அதுவும் கவரில் போட்டு ஒட்டின பிறகு பிறத்தியார் பிரித்துப் பார்ப்பது என்பது குற்றமில்லியோ? அதிலும் ஒரு யுவதி, ஒரு யுவனுக்கு ரகசியமாக எழுதி அனுப்பும் அந்தரங்கக் கடுதாசி. அதை இப்போது வாசிப்பது அலௌகிகமாயிருக்காதோ? தன்னாலே அது விலாசதாரர் கிட்டே சேர்ந்த பிறகு அவர் அதைப் படிக்கும் போது நமக்கு விஷயம் தெரியாமலா போயிடும்?'' என்றாரே பார்க்கலாம்! சாஸ்திரிகள் முகம் கன்றிப் போயிற்று.

பாகவதர் சொன்ன மாதிரியே கிருஷ்ண பரமாத்மா அந்தக் கடிதத்தைப் பெற்றுக் கொண்ட கட்டத்தில், ஏழு சுலோகங்களுக்கும் அற்புதமாய் விளக்கம் கொடுத்தார்! கதை முடிந்த பிறகு, காப்பறு மங்கலம் சாஸ்திரிகள், பாகவதரை அவர் திறமைக்காகப் பாராட்டிவிட்டுத்தான் போனார்!

இன்னொரு சந்தர்ப்பம்! இதே கிருஷ்ண பாகவதர் கதை நடுவில் கிருஷ்ண பரமாத்மாவின் வேணு கானத்தைப் பற்றி வருணிக்கையில், 'அந்த வேணு கானத்தில் பட்ட மரமும் துளிர்த்து விடும்'' என்றார்.

சபையிலே ஒரு முந்திரிக் கொட்டை ஆசாமி! தன்னுடைய குதர்க்க ஞானத்தைப் பற்றி நாலு பேர்கள் தெரிந்து கொள்ளணும் என்கிற சபலம். அவர் எழுந்திருந்து, ''அப்படியானால் கிருஷ்ண பரமாத்மா கையில் இருந்த புல்லாங்குழலும் பட்டுப்போன மூங்கில்தானே! இவருடைய கான விசேஷத்தால் அந்த மூங்கிலும் துளிர்த்து இருக்க வேண்டுமல்லவா? அந்த நிலையில் அவர் எப்படி அதை வேணுகானமாக வாசித்திருக்க முடியும்?'' என்று கேட்டார்!

இதற்கெல்லாமா அஞ்சுபவர் கிருஷ்ண பாகவதர்! அவருக்குத்தான் கோபம் வராதே! லேசாகச் சிரித்தார்.

''நீங்கள் கூறுவது ஒரு வகையில் உண்மை தான். ஆனால் பரமாத்மாவின் நாமங்களை உச்சரிக்கும் பிராணிகளுக்கே ஜனன மரணங்கள் கிடையாது என்றால், சாக்ஷாத் அந்தப் பரமாத்மாவின் கரத்திலேயே சதா காலமும் இருந்து வரும் அந்தப் புல்லாங் குழலுக்கு மறு பிறப்பு ஏது? ஆகையால் நாங்கள் நினைப்பது போல அது துளிர்க்க முடியாதல்லவா?'' என்றார்.

உடன் எழுந்த கரகோஷம் அந்த முந்திரிக் கொட்டை ஆசாமியின் முகத்தில் அடிப்பது போலவே இருந்தது!

மாங்குடி சிதம்பர பாகவதரைப் பற்றி உங்களுக்குத் தெரியுமா? அந்தக் காலத்திலே முதன் முதலாக இன்டர்மீடியட் படிச்சுட்டு உத்தியோகத்தைத் தேடிப்போகாமே, தஞ்சாவூர் கிருஷ்ண பாகவதரை மானசீகக் குருவாய் ஏற்றுக் கொண்டு, காலக்ஷேபத் துறையில் இறங்கினவர். ஆசாமி கொஞ்சம் இரட்டைநாடி! கொஞ்சம் . என்ன? அதிகமாகவேதான்! ஆங்கிலம் படித்த பாகவதர் என்கிற முறையில் அவர்தான் முதன் முதலாகக் காலட்சேபங்களின் நடுவில் 'கரண்ட் டாபிக்ஸ்'களை இன்றைய அமெச்சூர் நாடக நடிகர்கள் மாதிரி, ஆனால் உயர்ந்த நகைச்சுவை அடிப்படையில் அலச ஆரம்பித்து வழிகாட்டியவர். சிதம்பர பாகவதர் கதைகளை அந்தக் காலத்திலே பெரிய 'என்டர்டெயின்மென்டா'கவே பலர் நினைத்தார்கள்.

ஒரு சமயம் கதை பண்ணிண்டிருந்த போது பூமி சுழல்வதைப் பற்றிச் சொல்லும் சம்பவம் வந்தது. பாகவதர் தம் உடம்பை மறந்து சில சந்தர்ப்பங்களில் சபையில் நாட்டியம் மாதிரியே ஆடிக் கதை சொல்வதும் உண்டு. முன் வரிசையில் இருந்த ஒரு வயோதிக ரசிகர் பாகவதரின் சரீரத்தைக் கிண்டல் செய்யும் நோக்கத்துடன் ''உம்ம மாதிரி உலகம் சுழல்கிறதாக்கும்'' என்றார்.

''ஸ்வாமி! என்மாதிரி உலகம் சுழல்கிறது என்றால், நீங்கள் இன்னும் பல் முளைக்காத குழந்தையாத் தொட்டிலில்தான் படுத்திருக்க வேண்டும்! இந்த உலகம் வேகமாகச் சுழன்று நாள், வாரம், வருஷம் என்று வேகமாக ஓடுகிறதனால்தான் இப்போ நீர் பல் முளைத்துப் பல காலம் இருந்து பிறகு உதிர்ந்து குழந்தையாக இப்போது காலக்ஷேபம் கேட்டுக் கொண்டிருக்கிறீர்! நிச்சயமாக உலகம் என்னை விட வேகமாகத்தான் சுற்றுகிறது!'' என்று ஒரு போடு போட்டாராம்!

இந்தக் காலத்திலேயும் சில பாகவதாள் நடுநடுவே ஜோக் அடிக்கிறா! சிலர் அபிமானத்திலே சிரிக்கிறா! சிலர் ஆத்திரத்திலே சிரிக்கிறா! அர்த்த புஷ்டிக்காக எத்தனை பேர் சிரிக்கிறாளோ தெரியலே!...

அடடே! நான் இன்னும் காலக்ஷேபத்தைப் பற்றிக் காலக்ஷேபம் பண்ணிண்டே போனால் நீங்க சிரிக்கிறேளா முறைக்கிறேளா, இல்லை முணு முணுக்கிறேளா என்று என்னால் தெரிந்து கொள்ள முடியாதே ஸ்வாமி! அதனாலே....

பவமான சுதடு பட்டு....

......................

நித்திய ஜெயமங்களம்

---

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor: T. Sadasivam.

# திருப்பித்தரும் நேரம்



என் உயிரை எனக்கு அன்பளிப்பாகவே கடவுள் அளித்ததாக நினைக்கிறேன். அதை அடைவதற்கு நான் ஒன்றும் செய்துவிடவில்லை. அப்படியிருக்க அதைத் திருப்பிக் கொடுக்கும் நேரம் வந்தவுடன் புகார் செய்யவும் எனக்கு உரிமை கிடையாது.
ஜாய்ஸ் கேரி கூறியது — மென் ஒன்லி
— முத்து

---

இந்தக் காலத்துப் பொறுக்கூட்டமா? 'சரிதானையா! உட்காருங்கம்மா!' என்று சொல்லிவிட முடியுமா? எல்லோருமே விஷயம் தெரிஞ்சவாளாயிற்றே! கிருஷ்ண பாகவதர் மகா காதகர். சாஸ்திரிகள் நோக்கத்தைப் புரிந்து கொண்டார்.

''ஒருத்தருக்கு எழுதின லெட்டரை, அதுவும் கவரில் போட்டு ஒட்டின பிறகு பிறத்தியார் பிரித்துப் பார்ப்பது என்பது குற்றமில்லியோ? அதிலும் ஒரு யுவதி, ஒரு யுவனுக்கு ரகசியமாக எழுதி யனுப்பும் அந்தரங்கக் கடுதாசி. அதை இப்போது வாசிப்பது அவௌசிதமா யிருக்காதோ? தன்னாலே அது விலாசதாரர் கிட்டே சேர்ந்த பிறகு அவர் அதைப் படிக்கும் போது நமக்கு விஷயம் தெரியாமலா போயிடும்?'' என்றாரே பார்க்கலாம்! சாஸ்திரிகள் முகம் கன்றிப் போயிற்று.

பாகவதர் சொன்ன மாதிரியே கிருஷ்ண பரமாத்மா அந்தக் கடிதத்தைப் பெற்றுக் கொண்ட கட்டத்தில், ஏழு சுலோகங்களுக்கும் அற்புதமாய் விளக்கம் கொடுத்தார். கதை முடிந்த பிறகு, காப்பாளு மங்கலம் சாஸ்திரிகள், பாகவதரை அவர் திறமைக்காகப் பாராட்டிவிட்டுத்தான் போனார்!

இன்னொரு சந்தர்ப்பம்! இதே கிருஷ்ண பாகவதர் கதை நடுவில் கிருஷ்ண பரமாத்மாவின் வேணு கானத்தைப் பற்றி வருணிக்கையில், 'அந்த வேணு கானத்தில் பட்ட மரமும் துளிர்த்து விடும்'' என்றார்.

சபையிலே ஒரு முந்திரிக் கொட்டை ஆசாமி! தன்னுடைய குதர்க்க ஞானத்தைப் பற்றி நாலு பேர்கள் தெரிந்து கொள்ளணும் என்கிற சபலம். அவர் எழுந்திருந்து, ''அப்படியானால் கிருஷ்ண பரமாத்மா கையில் இருந்த புல்லாங்குழலும் பட்டுப்போன மூங்கில்தானே! இவருடைய கான விசேஷத்தால் அந்த மூங்கிலும் துளிர்த்து இருக்க வேண்டுமல்லவா? அந்த நிலையில் அவர் எப்படி அதை வேணுகானமாக வாசித்திருக்க முடியும்?'' என்று கேட்டார்!

இதற்கெல்லாமா அஞ்சுபவர் கிருஷ்ண பாகவதர்! அவருக்குத்தான் கோபம் வராதே! லேசாகச் சிரித்தார்.

''நீங்கள் கூறுவது ஒரு வகையில் உண்மைதான். ஆனால் பரமாத்மாவின் நாமங்களை உச்சரிக்கும் பிராணிகளுக்கே ஜனன மரணங்கள் கிடையாது என்றால், சாக்ஷாத் அந்தப் பரமாத்மாவின் கரத்திலேயே சதா காலமும் இருந்து வரும் அந்தப் புல்லாங்குழலுக்கு மறு பிறப்பு ஏது? ஆகையால் தாங்கள் நினைப்பது போல அது துளிர்க்க முடியாதல்லவா?'' என்றார்.

உடன் எழுந்த கரகோஷம் அந்த முந்திரிக் கொட்டை ஆசாமியின் முகத்தில் அடிப்பது போலவே இருந்தது!

மாங்குடி சிதம்பர பாகவதரைப் பற்றி உங்களுக்குத் தெரியுமா? அந்தக் காலத்திலே முதன் முதலாக இண்டர்மீடியட் படிச்சுட்டு உத்தியோகத்தைத் தேடிப்போனாமே, தஞ்சாவூர் கிருஷ்ண பாகவதரை மானசீகக் குருவாய் ஏற்றுக் கொண்டு, காலக்ஷேபத் துறையில் இறங்கினவர். ஆசாமி கொஞ்சம் இரட்டைநாடி! கொஞ்சம் . என்ன? அதிகமாகவேதான்! ஆங்கிலம் படித்த பாகவதர் என்கிற முறையில் அவர்தான் முதன் முதலாகக் காலட்சேபங்களின் நடுவில் 'கரண்ட் டாபிக்ஸ்'களை இன்றைய அமெச்சூர் நாடக நடிகர்கள் மாதிரி, ஆனால் உயர்ந்த நகைச்சுவை அடிப்படையில் அலச ஆரம்பித்து வழிகாட்டியவர். சிதம்பர பாகவதர் கதைகளை அந்தக் காலத்திலே பெரிய 'எண்டர்டெயின்மெண்டா'கவே பலர் நினைத்தார்கள்.

ஒரு சமயம் கதை பண்ணிண்டிருந்த போது பூமி சுழல்வதைப் பற்றிச் சொல்லும் சம்பவம் வந்தது. பாகவதர் தம் உடம்பை மறந்து சில சந்தர்ப்பங்களில் சபையில் நாட்டியம் மாதிரியே ஆடிக் கதை சொல்வதும் உண்டு. முன் வரிசையில் இருந்த ஒரு வயோதிக ரசிகர் பாகவதரின் சரீரத்தைக் கிண்டல் செய்யும் நோக்கத்துடன் ''உம்ம மாதிரி உலகம் சுழல்கிறதாக்கும்'' என்றார்.

''சுவாமி! என்மாதிரி உலகம் சுழல்கிறது என்றால், நீங்கள் இன்னும் பல் முளைக்காத குழந்தையாத் தொட்டிலில்தான் படுத்திருக்க வேண்டும்! இந்த உலகம் வேகமாகச் சுழன்று நாள், வாரம், வருஷம் என்று வேகமாக ஓடுகிறதனால்தான் இப்போ நீர் பல் முளைத்தும் பல காலம் இருந்து பிறகு உதிர்ந்து குழந்தையாக இப்போது காலக்ஷேபம் கேட்டுக் கொண்டிருக்கிறீர்! நிச்சயமாக உலகம் என்னை விட வேகமாகத்தான் சுற்றுகிறது!'' என்று ஒரு போடு போட்டாராம்!

இந்தக் காலத்திலேயும் சில பாகவதாள் நடுநடுவே ஜோக் அடிக்கிறா! சிலர் அபிமானத்திலே சிரிக்கிறா! சிலர் ஆத்திரத்திலேயே சிரிக்கிறா! அர்த்த புஷ்டிக்காக எத்தனை பேர் சிரிக்கிறாளோ தெரியலே!...

அடடே! நான் இன்னும் காலக்ஷேபத்தைப் பற்றிக் காலக்ஷேபம் பண்ணிண்டே போனால் நீங்க சிரிக்கிறேளா முறைக்கிறேளா, இல்லை முழி முழிக்கிறேளா என்று என்னால் தெரிந்து கொள்ள முடியாதே ஸ்வாமி! அதனாலே....

பவமான சுதுடு பட்டு....

......................

நித்திய ஜெயமங்களம்

---

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor: T. Sadasivam.



## சில சமயங்களில் வலியிலிருந்து நிவாரணம் பெற்ருல் மட்டும் போதாது என்பதைப் பெண்மணிகள் அறிவார்கள் ....

ஸாரிடான் தரும் இதமும், புத்துணர்ச்சியும் சில சமயங்களில் பெண்மணிகளுக்குத் தேவைப்படுகிறது. அதிமந்தமான உணர்ச்சி, சோர்வு அல்லது வலியிலிருந்து நிவாரணமளித்து, உங்களுக்கு தெம்பான உணர்ச்சியையும் மனோ உல்லாசத்தையும் அளிக்க ஒரே ஒரு ஸாரிடான் போதுமானது. ஸாரிடான் சாப்பிட்ட மாத்திரத்திலேயே அன்றைய அலுவல்களைத் திறம்படச் சமாளிக்கக்கூடிய வலுவையும், தெளிவாகச் சிந்திக்கும் திறனையும், உல்லாச உணர்ச்சியையும் பெறுவீர்கள்.

ஒரே ஒரு ஸாரிடான், வலியிலிருந்து நிவாரணம் அளித்து, சோர்வைப் போக்கி, புத்துணர்ச்சியளிக்க வல்லது. தலைவலி, பல்வலி மற்றும் உடல் வலியிலிருந்து நிவாரணம் பெற எப்பொழுதும் ஸாரிடான் தயாராக வைத்திருங்கள்.

'ரோஷ்' தயாரிப்பு
லோகல் டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ் : வால்டாஸ் லிமிடெட்

VT. 5530 (A)

யரிய பண்போடு உபயோகிக்கவும் உதவவும் உகந்தது பனாமா

# பனாமா

இழுக்க இழுக்க
இன்பம் இறுதிவரை




